

# கம்பன் காவியம்

## அன்றும் - இன்றும் என்றும்

பிஸ்ரீ- சரசுவதி இராமநாதன்







# கம்பன் காவியம்

## அன்றும் இன்றும் என்றும்



பிஸ்ரீ - சரசுவதி இராமநாதன்



வானதி பதிப்பகம்
தி.நகர் · சென்னை-17

# என்றுமுள கம்பன்

கவிஞன் என்பவன் காலத்தை வென்று வாழ்பவன். அவன் வாழ்வின் நிதர்சன உண்மைகளைக் காட்டுவதுடன் இலட்சிய எல்லைகளையும் காட்டுபவன். எப்படியும் வாழலாம் என்ற சமுதாய அமைப்பை மாற்ற 'இப்படி வாழ்க' என்று வழி காட்டுபவன். தமிழ் எனும் அளப்பரும் கடலை, அமுதக்கடலைப் பலப்பல வடிவங்களில் முகந்து நமக்குத் தந்தவர்கள் இலக்கிய ஆசிரியர்கள்.

சொல்லை இசைத்துச் சுந்தரமாம் ஒரு காப்பியம் தந்த கம்பனுக்குக் கவியுலகின் தனிச்சிறப்பான இடம் என்றும் உண்டு 'என்றுமுள தென் தமிழில்' என்றுமுள கருத்துக்களைத் தந்து அவனும் 'என்றுமுள' கம்பனாகிறான்.

அரசியலில், போரில், அறத்தில், ஒழுக்க நெறியில் அவன் கூறிய கருத்துகள் அன்றும் இன்றும் என்றும் நிலைத்து வாழும். அதனைச் சுட்டிக் காட்டுவதே இந்த முயற்சி வெவ்வேறு துறையிலும் அவனது சிந்தனைகள் விரிந்து நிற்பதைச் சுட்டிக் காட்டும் இம்முயற்சியில், சில கருத்துக்கள் திரும்பத் திரும்பவரக்கூடும்- 'கூறியது கூறல்' என்றுகொள்ளாமல் வலியுறுத்தலாக ஏற்றருள்க.

ஆசிரியர்கள்

# நன்றி

நெல்லை மாவட்டக் கம்பன் கழகம் எங்களது முதல் முயற்சிக்குப் பேராதரவு நல்கி, அடுத்த முயற்சிக்கும் தூண்டுகோலாக நின்றது. புரவலர் திரு. *M. S.* சுந்தரம் பிள்ளை அவர்களுக்கு எங்கள் சொற்கள் போதா நன்றி கூற! தலையால் கைம் மாறிலேம்! 'வானதி'யின் முத்திரையில் வெளி வரும் நூல்கள் தமிழ்கூறும் நல்லுலகில் தனிச்சிறப் புடையன. அப்படித் தரம் காக்கும் 'வானதி' தமிழ் போற்றும் பணியில், இதனைத் தன்னுடைய வெளி யீடாக வெளியிடுவது எங்கள் பேறு இவர்கள் எல்லோருக்கும் எங்கள் நன்றி! நன்றி! நன்றி!

பி. ஸ்ரீ. ஆசார்யா
சரசுவதி இராமநாதன்

# சமர்ப்பணம்

தமிழகத்திலும், கடல் கடந்த நாடுகளிலும் கம்பன் புகழ் பாடும் கன்னித்தமிழ் அன்பர்களுக்கே எங்கள் இந்த வெளியீடு சமர்ப்பணம். கம்பன் கருத்துகள் என்றும் உலக மக்களுக்கு; மொழி மதம் கடந்த நிலையில், வழிகாட்டி நிற்கும் என்பது திண்ணம். அத்தகைய கருத்துகள் சிலவற்றை விளக்கித் தருமாறு கம்பன் மேதை திரு பி. ஸ்ரீ ஆசார்யா அவர்களையும், கம்பராமாயண நவரசத் திலகம் பேராசிரியை. சரசுவதி இராமநாதன் அவர் களையும் கேட்டுக் கொண்டோம். அவர்களும் உதவினர். 'வானதி' திருநாவுக்கரசு அவர்களும் வெளியிட இசைந்தார்கள். என்றுமுள கம்பன் உங்கள் கையில் வந்துள்ளான்.

ஏற்று இன்புறுக!

**நெல்லை மாவட்டக் கம்பன் கழகம்**

# பதிப்புரை

இந்தப் புத்தக வெளியீட்டிற்கு முக்கிய நோக்கம் என்ன வென்ருல் நம்நாடு இன்று சென்று கொண்டிருக்கும் நிலையும், கட்டுப்பாடு இல்லாத மக்கள் வாழ்க்கையும் பொறுப் பில்லாத அரசியல்வாதிகளின் போக்கையும் ஓரளவு சுட்டிக் காட்டுவதுடன், கம்பன் காவியத்தில் பாத்திரங்கள் வாயிலாக தான் எவ்வாறு மக்களுக்கும் அரசாங்கத்துக்கும் அறிவுரை கள் வழங்குகிருர் என்பதையும், அவன் வழங்கியிருக்கும் அறிவுரைகள் அவன் காலத்துக்கு மட்டுமல்லாமல் இன்றைக்கும் அது என்றைக்கும் பொருந்தக் கூடிய நிலையில் கம்பன் எவ்வளவு தீர்க்கதரிசனமாக தன் காவியத்தின் மூலக் கருத்துக்களை வழங்கியிருக்கிருன் என்பதை அமரர் பி.ஸ்ரீ அவர்களும் செந்தமிழ்ச் செல்வி சரசுவதி இராமநாதன் அவர்களும் கட்டுரைகள் வடிவில் நமக்கு உள்ளங்கை நெல்லிக்கனியென எடுத்துக்காட்டியுள்ளார்கள். இவை காவிய நயத்தை ரசிக்க மட்டுமல்லாது, சிந்தனையைத் தூண்டக் கூடியதாகவும் உள்ளன. இந்த அருமையான கட்டுரைகளைத் தேர்ந்தெடுத்துக் கொடுத்து வானதியில் நூல் வடிவாக்கிட வேண்டுமென நெல்லை மாவட்டக் கம்பன் கழகத்தினர் அன்போடு கேட்டுக்கொண்டார்கள். இந்நூல் வெளிவருவது மிகமிக அவசியம்; மக்களுக்கு நலம்பல பயக்கும் எனக்கருதி வானதி பதிப்பகத்தில் இந்நூலை வெளியிட்டுள்ளேன்.

இந்நூல் புதுவைக்கு கம்பன் விழாவில், கம்பன் அரங்கில் அரங்கேறுவது தமிழ்ச் சங்கத்தில் அரங்கேறுவது போலாகும்.

இந்நூலை எழுதிய அமரர் பி.ஸ்ரீ அவர்களை அஞ்சலித்து அருமைச் சகோதரி செந்தமிழ்ச் செல்வி சரசுவதி ராமநாதன் அவர்களைப் பாராட்டுகிறேன். தேனுனை தமிழ்நூலைத் தேர்ந் தெடுத்துக்கொடுத்த நெல்லை மாவட்டக் கம்பன் கழகத் தாருக்கு நெஞ்சார்ந்த நன்றி.

கம்பன் காவிய நலத்தையும் கருத்துக்களையும் என்றும் விரும்பும் அன்பர்களுக்கு நன்றி.

அன்புள்ள
**வானதி ஏ. திருநாவுக்கரசு**
**வானதி பதிப்பகம்**

## பொருளடக்கம்

# கம்பன் காவியம்

## அன்றும் இன்றும் என்றும்

### 1 கம்பனில் காந்தியம்

இதென்ன தலைப்பு? கம்பன் வாழ்ந்ததெப்போது? காந்தியடிகள் வாழ்ந்தது எப்போது? கம்பனில் காந்தியமா – என்று வியக்க வேண்டாம். கம்பனின் கருத்துகள், கம்பன் கண்ட ராமனின் நடையில் நின்றுயர் நாயகனின், செயல் களில் புலப்பட்டன. அந்த நாயகனையே ''ஆதர்ச புருஷனு''க் கொண்டவர் அண்ணல் காந்தி. ஆகவே காந்தியத்தின் வேரும் விதையுமாகக் கம்பனின் கருத்துகள் அமைந்திருந்தன என்பதில் வியப்பில்லை! அரசியலில் ஓர் ஆன்மிகவாதியாக வாழ்ந்தவர் மகாத்மா.

#### அரசும் அரசியலும்

'திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே' என்றிருந்தவர் தமிழர், முறை செய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு இறைவன் என்றது குறள். அரசின். அரசனின், அரசியலின் இயல்பை ஒட்டியே உலகில் எல்லாம் நடக்கும். அந்தணர் நூற்கும், அறத்துக் கும் ஆதியாக நின்றது மன்னவன் கோலே. மாதவர் நோன்பும் மடவார் கற்பும் காவலன் காவலின் வழி நடப்பன. இவ்வளவு பொறுப்பும் சிறப்புமிக்க அரசு

நடத்துவது என்பது ஏதோ மகிழ்ச்சிக்குரிய பொருள் என எண்ண வேண்டாம் என்றது சிலம்பு! ''மன்பதை காக்கும் நன்குடிப் புறத்தல் துன்பம் அல்லது தொழுதகவு இல்'' நல்லரசு நல்லரசன் அமைவது மக்களின் பேறு. அறம் சிறக்க அரசியல் இன்றியமையாதது. அரசியல் சிறக்க அறம் இன்றியமையாதது.

கோசலத்தினை அணி செய்யும் சரயு ஆறு 'இரவிதன் குலத்து எண்ணில்' பல் வேந்தர் தம் பரவுநல் ஒழுக்கின்படி பாய்ந்து வளம் செய்தது. தாய் முலைபோல் மக்களை வளர்த்தது. நல்லொழுக்கமுடைய அரசர் ஆண்டதால் தான் அயோத்தி அரசில்

''கூற்றம் இல்லை ஓர் குற்றம் இன்மையால்'' (1. 1. 12.)

என்ற நிலையிருந்தது எனலாம். எல்லாரும் எல்லாப் பெருஞ் செல்வமும் பெற்றிருந்த, ஒத்துரிமை உடையவராய் உவக்கின்ற, ஒருமைச் சமுதாயம் அது இந்த அயோத்தியில் ஏழுலகும் தனிக்கோல் செல்லவீற்றிருந்து, வாழ்வித்தருள் திருமாலே இராமனாக வந்தான் எனும்போது இவ்வரச குலத்தின் பெருமை, யாரால் அளவிட முடியும்!

### தசரதன் ஆட்சி:

அரசர்க்கரசன் தசரதன் ஆண்டது கோசலம், அவனோ

''தாய் ஒக்கும் அன்பின், தவம் ஒக்கும் நலம் பயப்பின்
சேய் ஒக்கும் முன்னின்று ஒரு செல்கதி உய்க்கும் நீரால்
நோய் ஒக்கும் என்னின் மருந்தொக்கும்; 'நுணங்கு கேள்வி
ஆயப் புகுங்கால் அறிவு ஒக்கும் எவர்க்கும் அன்னான்
(1. 4. 4)

அரசன் இப்படியிருந்ததால்தான் அவனாட்சியில் வெள்ளம் பறவை, விலங்கு, வேசியர் உள்ளம் இவைகூட ஒருவழியில் ஓடின. அரச நீதியின் சிறப்பு மாறும் உளம் படைத்த கணிகை மாதரையும் செம்மைப்படுத்தியது. மக்களாகிய

உயிருக்கு அவன் உடம்பு ஆயினன். மன்னுயிர் எல்லாம் தன் உயிர் என ஓம்பினன்; ஆகவே அவனை உடம்பு என்று பொருத்தமுறக் கூறினர், கம்பர்,

*"தான் உயிர் என்பதறிகை வேந்தர்க்குக் கடனே"* என்றும் *"மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்"* எனவும் முன்னையோர் கூறியிருக்கக், கம்பனே மன்னனை உடல் என்றார். ஜனநாயகம் என்னும் மக்கள் உரிமையும், நலமும் பேணவே மன்னர்கள் என்பதால் அவர்களைக் காவலர் என்பதில் கம்பருக்கு உடன்பாடு உண்டு. உயிருக்குக் காவலுக்குத்தான் உடம்பு. உடம்பு அழியலாம்; மாறலாம் உயிரோ நிலையானது. அதுபோல, ஆட்சியும், ஆள்பவனும் மாறலாம். உயிரானவர் மக்களே; அவர்களுக்கே சிறப்பு என்பதனைக் காட்டவே, கம்பர்

*'உயிரெலாம் உறைவதோர் உடம்பும் ஆயினன்'* (1. 4. 10) என்பார். வறிஞன் ஓம்பும் ஒரு செய் போல நாட்டை ஆண்டானும் தசரதன். ஒரு நிலம் மட்டுமே உள்ள வறிய உழவன் அந்நிலத்தைப் பேணிக்காப்பது போல நாட்டைக் காப்பான் தசரதன் என்பார்.

*"வையம் மன்னுயிராக அம் மன்னுயிர்*
*உய்யத் தாங்கும் உடல் அன்ன மன்னனுக்கு"* (2. 2. 25)

என்று பிறிதோரிடத்திலும் மன்னனை உடல் என்பார். நல்லரசின் கீழ்வாழும் மக்கள் என்றும் மகிழ்வுடன் வாழ்ந்து ஆறில் ஒரு பங்கு இறை செலுத்தி 'மன்னன் வாழ்க' என வாழ்த்துவர். குடிபழி தூற்றும் கோலன் ஆகில், படுகதிர் அமயம் பார்த்திடுதல் போல, இவன் ஆட்சி கவிழாதா என்று தவிப்பர்.

## இளவரசன் இராமன்:

குணங்களாற் சிறந்த இராமன், எதிரே வரும் மக்களை அன்போடும் கருணையோடும் முகமலர் மலர நோக்கி,

"எதுவினை? இடரிலை? இனிதுறும் மனையும்?
மதிதரும் குமரரும் வலியர்கொல்" (I. 5. 132)

என்று வினவுகிறான். "உங்களுக்கு என்னால் ஆகவேண்டிய காரியம் உளதோ? உங்களுக்கு இடரேதும் இல்லையே! உம்மனையும் மக்களும் நலமா?" என்பதில்தான் எவ்வளவு பரிவு! இப்படிப்பட்ட அன்பு எல்லோரது மனத்திலும் வாழும்; வாழ்த்துப் பெறும்; அல்லவா?

"ஐயா! உம்மை எம் அரசாகப் பெற்றபின் இவையெல்லாம் பொருளா? அனைவரும் நலமே!" என்று பேசி மகிழ்ந்து வாழ்த்துகின்றனர்.

இன்றும் கூடத் தன் தொகுதி மக்களை, தன் ஆளுகையிலுள்ள மக்களை அன்புடன் நலம் விசாரித்து அவர்களின் அன்பையும், பாராட்டையும் பெறுபவரே, ஆளும் பிரதிநிதியாக முடிகிறது!

அமைச்சர்கள் :

தேவர்கோனுக்குப் பிரகஸ்பதி எனும் வியாழன் குருவாக அமைந்தது போல் தசரதனுக்கு வசிட்டன் வாய்த்திருந்தான். அமைச்சரும் நல்லமைச்சராய்த் திகழ்ந்தனர் அமைச்சருக்கு இன்னின்ன தகுதிகள் வேண்டுமென்று கம்பர் அழகாக வரையறுப்பர்; நற்குலம், கலைச்சிறப்பு கேள்வியறிவு நடுவுநிலைமை, தரும உணர்வு இவை நல்லமைச்சனின் குணங்கள். (2. 1. 5)

'மந்திரிக்கழகு வரும் பொருளுரைத்தல்' என்றபடி வருவது உணரும் ஆற்றல், தீமை வருமுன் அறிவினால் தடுத்துக்காக்கும் திறம், நூலறிவு, நற்குடிப் பிறப்பு இவை உடையவராய், மயிர்நீப்பின் வாழாக் கவரிமானைப் போன்ற மானம் உடையவரே நல்லமைச்சர். இவர்கள் தலைவனுக்கு உறுதி பயப்பனவற்றையே நாடுவர். அரசன்

வெகுண்டாலும், தம் உயிருக்கே இறுதி வருமாயினும், நீதியே பேசுவர். முக்காலமும் உணரும் திறம் பெற்றவர். இப்படிப் பட்ட அமைச்சர் துணையுடன் ஆள்பவன் நல்லரசுதானே நடத்துவான்!

## வசிட்டர்

இப்படிப்பட்ட அமைச்சர் குழுவின் தலைவர் வசிட்டர். அவரே தசரதனின் குலகுரு. அவரிடமே தன்மகன் அரசியலறிவு பெறவேண்டுமென விழைகிறான், தசரதன். வசிட்டர், இராமனுக்கு உறுதிப்பொருளை எடுத்துரைக்கிறார். வான்மீகத்தில், தசரதன், இராமனுக்கு இளவரசுப் பட்டம் சூட்டும் போது அவனுக்கு அரசியலறம் பற்றிய அறிவுரைகள் தருவதாக வருகிறது. வசிட்டரிடம் தெரிந்து கொள்ளாத அறத்தையா தசரதனிடம் தெரிந்துகொள்ளப் போகிறான் என்றே. கம்பன், வசிட்டர் வழியே அந்த உபதேசம் கிடைக்குமாறு செய்கிறான். குருவின் வழிவரும் உபதேசத்தின் மேன்மை கூறவும் வேண்டுமோ?

*''வையம் மன்னுயி ராகவும் மன்னுயிர்*
*உய்யத் தாங்கும் உடலன்ன மன்னனுக்(கு)*
*ஐயமின்றி அறம்கட வாதருள்*
*மெய்யில் நின்றபின் வேள்வியும் வேண்டுமோ?''*

(2—2—25)

அறம், அருள், மெய் மூன்றும் சன்மார்க்கத்தின் அடிப்படைச் சித்தாந்தங்கள். சத்தியம், அஹிம்சை ஆகிய இரண்டையும் மாந்தருக்குள் ஒரு தெய்வம் காந்தியடிகள் இந்த நூற்றாண்டில் வலியுறுத்தியதும் கருதத் தக்கதே, மனிதனுக்கு மூச்சுப் பைகள் இரண்டும், இதயம் ஒன்றும் உள. அறமும் மெய்யும் மூச்சுப்பைகளாகவும் அருள் இதயமாகவும் அமைவதே நல்லொழுக்கம் அல்லது சன்மார்க்கத்திற்கு அடிப்படை.

இந்த நல்லொழுக்கம் மும்மூர்த்திகளுக்கும் இன்றியமையாதது. இந்த ஒழுக்கம் இல்லாவிடின், அவர்களாலும் தத்தம் தொழில் செய்ய முடியாது என்கிருன்.

'உருளும் நேமியும் ஒண்கவர் எ:கமும்
மருளில் வாணியும் வல்லவர் மூவர்க்கும்
தெருளு நல்லற மும்மனச் செம்மையும்
அருளும் நீத்தபின் ஆவதுண் டாகுமோ?' (2 2. 19)

போர் ஒடுங்கினுல், புகழ் ஒடுங்காது :

போர் செய்து புகழ் பெறுவதே அரசனுக்கு அழகு என்ற நிலையை வெறுத்த அமைதியாளன் கம்பன். உலகில் போரும் பூசலுமில்லாத அமைதிச்சமுதாயத்தை, அன்புக்குடும்பத்தைக் காண விழைந்தான். இதையும் வசிட்டரின் கூற்ருக எடுத்துரைத்தான்.

'யாரொடும்பகை கொள்ளலன் என்றபின்
போரொடுங்கும்; புகழ் ஒடுங்காது; தன்
தார் ஒடுங்கல் செல்லாது, அது தந்தபின்
வேரொடும் கெடல் வேண்டல் உண்டாகுமோ?' (2. 2. 21)

மகாத்மா காந்தியடிகளின் அன்பு, அகிம்சை எனும் தத்துவங்களின் தீர்க்கதரிசியாக, முன்னோடியாகக் கம்பன் விளங்குவது கண்டு வியக்கிருேம். மகாகவி என்பவன் தீர்க்கதரிசியே! கவிகள் ஆயினோர் காண்குவர் மெய்ப் பொருள்' என்று கம்பனே கூறுவான், பகைமை ஒழிவதற்கு பகைவனை அழிக்கத் தேவையில்லை. பகைவனும் மனம் திருந்தி நல்லவன் ஆகக்கூடும் என்ற இந்த எண்ணத்தை வசிட்டன் என்னும் மகாத்மா கொண்டிருந்ததால்தான் "யாரொடும் பகை கொள்ளலன் என்றபின் போர் ஒடுங்குமே தவிர புகழ் ஒடுங்காது"—என்று பேசுகிருன். "பகைவனுக் கருள்வாய்" என்று கூறிய பாரதியும், 'பகை நடுவினில் அன்புருவான நம் பரமன் வாழ்கின்ருன்"

என்றார். பழிக்குப் பழி வாங்கிப் பகைமையை வேரறுக்க எண்ணினால், பகைக்குப் புதிய கிளைகள் சில முளைக்கும் என்பதே வசிட்டனின் கருத்து.

ஆனால் இதை இராமனால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. அரக்கரை வேரறுக்கவே இராமாவதாரம் கருணை காட்டிப் பகைமையைப் போக்கும் முயற்சியையும் இராமன் செய்து பார்த்தான்.

முதல் நாள் போரில் தசமுகனின் படைவீரர்கள் இராமபாணத்திற்கு முன் நிற்கமாட்டாது ஓடிச்சென்றனர். தன்னந்தனியே நின்ற இராவணனுக்கு இராமன் பேராண்மை தோன்ற உயிர்ப்பிச்சை தந்து அறிவுரை பகர்கிறான்.

"சிறையில் வைத்தவள் தன்னை விட்டுவிடு. தேவர்களை அவர்தம் முறையிலிருக்க விடு. உன் தம்பி வீடணனை அரக்கர்குலத்தின் அரசனாக்கி விடு. அப்படியானால், உன் தலையை நான் தரையில் தள்ளமாட்டேன்." இவற்றுக்கு உடன் படாவிடில் எஞ்சிய படையைத் திரட்டி மறுநாள் போருக்கு வரட்டும் என்பது இராமச்சந்திரமூர்த்தியின் அறிவுரை ஒருவேளை மறுநாள் தசமுகன் சமாதானத்திற்கு வந்து, தேவியை விட்டு வீடணனுக்கு அரசு தந்து, தேவர்களை அவர்தம் பொன்னுலகுக்கு அனுப்பி விட்டால், என்ன செய்வது? இராவணனுக்கு என்னதான் கிடைக்கும் என்று கருதுவதற்கிடமின்றி, 'என்னுடைய கோசல நாடு நீர்வளம், நிலவளமிக்கது. வனவாசம்முடியும்நேரமிது. முடிந்த பின் அது எனக்குரியது. அதையே உனக்குத் தருகிறேன்' என்று இராமனின் குறிப்புத் தோன்ற—

"ஆளை யாவுனக் கமைந்தன மாருதம் அறைந்த
பூளை யாயின கண்டனை இன்றுபோய்ப் போர்க்கு
நாளை வாவென நல்கினன் நாகிளங் கமுகின்
வாளைதாவுறு கோசல நாடுடை வள்ளல்" (6. 14. 255)

என்கிறார் கம்பர். "ஸாஸ ஸாம தான" என்ற பாடலில் தியாகராசரும் இதே கருத்தைச் சரணத்தில்,

"ஹிதவு மாட லெந்தோ பாகபல்கி திவி
சதமுகான யோத்யா னித்து நண்டிவி"

என்று பாடுகிறார். பகைவன் மனம் திருந்தினால் போதும் என்பதே இராமனின் கருத்து. இராமனின் வீரநெஞ்சும், ஈரநெஞ்சும், ஒருங்கே புலனாகின்றன. பிறருக்கு உதவுவதற்குத் தன்னுயிரையும் தரச்சித்தமாயிருக்கும் இராமனை வழிபட்டதால் தான் அண்ணல் காந்தியும் மன்னுயிர் வாழத் தன்னுயிர் தரவும் முன்வந்தார் போலும்!

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன்" இந்நிலத்திலிருந்தாலும் அவன் வானுறை தெய்வமாகவே கருதப் படுவான் என்பது குறள். வாழ்வில் "தெய்வ வாழ்வு" போல மரணத்திலும் "தெய்வ மரணம்" உண்டு எனச் சடாயுவின் உயிர்த்தியாகம் காட்டி நிற்கிறது,

குரக்கரசு:—

குரங்கினத்தரசன் சுக்ரீவனுக்கு இராமன் அரசியல் அறம் பற்றி எடுத்துரைக்கிறான், வலிமை நிறைந்தஒருவன் ஆண்ட அரசை மற்றவன் கைப் பற்றினால், அதனால் சில தீமைகள், எதிர்ப்புகள், கிளர்ச்சிகள் வருமென்பதை முன்னரே அறிந்து சொல்கிறான் அரசியலறிவு மிக்க அரசராமன்.

சிறியவர் என்று யாரையும் இகழக் கூடாது. சிறிய கூனி கூட ஒரு பெரிய ஆட்சிமாற்றத்தைச் சாதிக்க முடிந்தது என்பது அரசியலாளருக்கு வேண்டிய எச்சரிக்கை அறம்மறந்த அரசு அடியோடு கவிழும். "அறத்தினது இறுதி வாழ்நாட்கு இறுதி; அஃது உறுதி" இவை அன்றையச் சுக்ரீவனுக்கு மட்டுமல்ல; என்றைக்கும் ஆள்பவர்க்கு இன்றியமையாத அறிவுரைகள்.

இன்றும் என்றும்:—

கம்பனில் கூறப்படும் அரசியல் நெறி, அறம், இவை எக்காலத்துக்கும் பொதுவானவை. வளரும் குடியாட்சிக்கும் ஆழ்ந்து, அகன்ற அடிப்படையாகும். அறத்துக்கும், தெய்வ அரசான வானரசுக்கும் விரோதமாக நடக்கும் எந்த அரசும், எத்தகைய வலிமை பொருந்தியதாயினும் அழிவது திண்ணம்.

உலகில் அமைதி நிலவப் போர் வெறியற்ற புனித அன்புச் சமுதாயம் தேவை என்று தலைவர் பலரும் கருதினர். அணு ஆயுதங்களைத் தயாரிக்கலாகாதென அமெரிக்காவுக்கு ஒருமுறை மூதறிஞர் இராஜாஜி தூதுக் குழுவுடன் சென்று இருந்தார். முதலில் சர்வதேச சங்கமும் பின்னர் ஐக்கிய நாட்டுநிறுவனமும் 'போர்ஒடுங்கிடவே' பணி புரிய வந்தன அமரர் நேருவும் பஞ்சசீலக் கொள்கையைப் பாருக்குரைத்தார். கம்பனில் வசிட்டன் கூறிய அறம், இராமன் உரைத்த அரசியல் திறம் இவை அன்றைக்கு மட்டுமல்லாமல், என்றைக்கும் பயன்படத்தக்கன. கம்பன் என்றுமுள தென்தமிழ் மட்டும் இயம்பவில்லை. என்றுமுள்ள நெறி-முறைகளையும் உரைத்துள்ளான். அக்கருத்துக்கள் உலகில் பரவினால் மீண்டும் இராம ராஜ்ஜியம் நின்று நிலவுமே!

# 2 மது வெறியில் மதி மோசம்

அரசியல் மக்களுக்கு முழு உரிமையும் கொடுப்ப தாயினும் அது தர்மத்திற்குக் கட்டுப்பட்டதுதான். அறத் திற்கு வணங்காத எந்த அரசும் அதிக நாள் நிலைக்காது. மக்கள் ஆட்சி என்பது சமுதாயத்தின் எல்லா அங்கங் களுக்கும் ஒத்த நலம் பயப்பதாக இருக்க வேண்டும். கடை யனுக்கும் கடைத்தேற்றம் தரும் நல்லரசே உண்மையான மக்களாட்சி. இராமானுசரைக் குறிப்பிடும் போது "தாழ்ந் தாருக்கும் ஐயோ! என்று முகங்காட்டும்நேர்மை இவர்பால் காணுகிறோம்" என்பர். இந்த பெரும் கருத்து சமயத் துறைக்கு மட்டுமல்லாது வாழ்க்கையின் எல்லா துறைக்கும் பொருந்துவதாகும். அவரவர் வாழ்வும் உயர்த்திக் கொள்ளவும், பொருளீட்டவும், இன்பம் துய்க்கவும் முழு உரிமை உண்டு. ஆயினும், அறத்துக்கு மாறான காரியங் களைச் செய்ய யாருக்கும் உரிமையில்லை. எந்த அரசியலிலாவது தற்கொலை செய்து கொள்ளவோ கொலை செய்யவோ உரிமை உண்டா? இல்லை, அவை குற்றம். அது போலவே அறம் கொல்பவரையும் 'சதி செய்பவரை யும் தண்டிக்கச் சட்டத்தில் இடம் உண்டு. அத்தகைய கூட்டத்தினரைக் களைவது அரசியலில் களைஎடுப்பதுபோலத் தான். கொடியாரை வேந்தன் ஒறுப்பது 'பைங்கூழ் களை கட்டதனொடு நேர்' என்று வள்ளுவரும் கூறுவார். இத் தகைய அரசாங்கம் மக்களை உயிரெனப் பாதுகாக்க வேண்டியது கடமை. வீணான தீய பழக்கங்களால் மன்பதை உயிரும், நாட்டின் உயிரான பண்பாடும் பாழாக்கப் படு வதை எந்த அரசும் விடக்கூடாது. கள், ஆறாக ஓடிய காலம் அந்தக் காலம். ஆண்களும், பெண்களும் புலவரும் பாமரரும், வீரரும் வேந்தரும், மது அருந்திய காலம் அக்காலம் என்று அறிகிறோம். அந்தக் காலச் சூழலைச் சித்திரமாகக் காட்டிய

கம்பர் இந்த மதுப் பழக்கம் மதி கெடுக்கும் என்பதைக் காட்டி எச்சரிக்கவும் மறக்கவில்லை. வாலியின் தீர்க்க தரிசனம்:-

இராமனது அம்பால் உயிர் விடும் நேரம் வாலி சில வாசகங்களைப் பேசுகிறான். "இராமா! என் தம்பி சரியான குரக்கியல்புடையவன். மதுவை அளவுக்கு மீறிக் குடித்து அறிவு தடுமாறிப் போவான். அப்படி அவன் உனக்களித்த வாக்குறுதியை மறந்து நிலைதடுமாறி மதி மயங்கி நன்றி கொன்று விட்டாலும், "என் மீது போட்ட பாணத்தை அவன் மீது போட்டுக் கொன்றுவிடாதே" இதை அவன் தன் தம்பியின் இயல்பை உணர்ந்தே பேசியிருக்கிறான் என்று காண்கிறோம் சுக்ரீவன் நல்லவன்தான். ஆனாலும் கள் குடிக்கும் பழக்கத்திற்கு அடிமையானவன். அந்தக் கள் மயக்கத்தால் காம மயக்கமும் கொண்டவன். குறித்த காலத்தில் தான் வாக்குக் கொடுத்திருந்தபடி இராமனுக்கு உதவ வந்து சேரவில்லை. தேவியைப் பிரிந்து கார்க்காலத்தில் விரகத்தீயினால் வெந்து கொண்டிருக்கும் இராமன், சுக்ரீவனுடைய செயலுக்குக் காரணம் புரியாமல் கோபம் கொள்ளுகிறான். தன் தம்பி இலக்குவனை அனுப்பிக் கிட்கிந்தையைக் கலக்கச் சொல்லுகிறான் தாரை தலையிட்டதனால் இளைய பெருமாளின் சீற்றம் குறைகிறது.

புத்தி தெளிந்தவுடன் சுக்ரீவன் நாணமும், கழிவிரக்கமும் கொள்கிறான்.

"வஞ்சமும், களவும், பொய்யும், மயக்கமும், மரபுஇல்கொட்பும்;
தஞ்சம் என்றாரை நீக்கும் தன்மையும், களிப்பும், தாக்கும்!
கஞ்ச மெல் அணங்கும் தீரும், கள்ளினால் அருந்தினாரை
நஞ்சமும் கொல்வது அல்லால், நரகினை நல்காது அன்றே?"

(4. 10. 95)

கள் குடிப்பவருக்கு இந்த உலகத்தில் கதியே இல்லை. பகைவர் கொண்ட சினத்தையும், நண்பர் செய்த உதவியையும், தான் கற்ற கல்வியையும், கண்ணால் கண்ட காட்சியையும், அறிஞர்கள் சொன்னதையும், மானம் அழிந்ததையும், பெரும் துன்பம் வந்ததையும் கூட இந்த கள் மயக்கம் உணர விடாது தடுக்கும் என்று சொன்னார். இதைவிட அழிவைத் தரக்கூடிய பொருள் வேறுண்டா? நஞ்சு கூட அருந்தியவரைக் கொல்லுமே தவிர நரகம் தராது. கள்ளோ கொடு நரகத்தில் சேர்த்து விடுமே இனிமேல் இந்த மதுவைக் கையினால் என்னமனத்தினால் கூட தீண்ட மாட்டேன். அப்படி மதுவை நான் இன்னமும் விரும்பினால் இராமனின் திருவடிகள் என்னை மிதித்து அழிக்கட்டும்'" என்று குடியின் தீமைகளைத் தெளிவாக எடுத்துரைக்கிறான்.

அரக்கர் சமுதாயம் :

மதுவின் கொடுமைக்குச் சுக்கிரீவன் சான்றாக நிற்பது போல, மதுவிலக்கின் நன்மைக்கு வீடணன் சான்றாக நிற்கிறான். அரக்கர் இனம் கோப வெறி, அதர்ம வெறி, அதிகார வெறி, ஆடம்பரவெறி, காமவெறி இவற்றோடு கள் வெறியும் கொண்டிருக்கிறது. இலங்கை இராக்கதர்கள் வாழ்வு வெறியாட்டமாகவே இருக்கிறது. காமப் பயிருக்கு நீர் வார்த்தது போல நறவு அருந்துகிற கூட்டம் அது.

இத்தகைய அரக்கர் மத்தியில் வீடணன் சத்தியாகிரகியாக காட்சி அளிக்கிறான். அறநெறியில், அருள் நெறியில், சத்திய நெறியில் நிலை நிற்பவன் கள்குடிக்கக்கூடாது என்பது வீடணன் கொள்கை எனலாம். "உண்டிலேன் நறவம், பொய்ம்மை உரைத்திலேன், வலியால் ஒன்றும் கொண்டிலேன் என்று அழுத்தமாகச் சொல்கிறான். இவனுடைய அரண்மனையில் நிந்தனைக்குரிய நறவமும், நெறி இல் ஊன்களும் கொஞ்சமும் இல்லை என்பதை அனுமனும் இராமனிடம் கூறுவான்.

இராவணின் அரசிலே அவன் மகன் இந்திரசித்தன் ஒரு சிறந்த தேச பக்தன். அவனுடைய கருத்தின்படி வீடணன் தேசத் துரோகி. தன் சிறிய தந்தையைப் போர்க் களத்தில் இந்திரசித்தன் பழித்துரைக்கும் போது வீடணன் ''உங்களுடைய உணவும், குடியும் உங்களை தீய வழிகளில் இழுத்துச் சென்று விட்டன. நானோ உங்களைப் போல குடித் தவன் அல்லன். மாமிசம் உண்டவன் அல்லன். ஆகவே உங்கள் தீய பழக்கங்கள் எனக்கு உடன்பாடுமில்லை,'' என்று தெளிவாகக் கூறிவிடுகிறான். இந்த இடத்தில், (பின்னால் காந்தி கண்ட சத்யாகிரகிக்கு இருக்க வேண்டிய குணங்களோடு கூடிய) ஓர் அறவோனை முன்னரே கமபன் காட்டி விட்டான்.

கிட்கிந்தையிலும், இலங்கையிலும் மட்டுமின்றிக் கோசலத்திலும் மதுபழக்கம் இருந்திருக்கிறது. கள் மயக்கத்தால் நிலை தடுமாற்றங்கள் ஏற்பட்டு இருக்கின்றன. தன் நிழலை மது வள்ளத்தில் பார்த்த ஒருத்தி ''தோழி! நீயும் என்னோடு வந்து மது அருந்தேன்'' என்று அழைக்கிறாள். கோப்பையில் தெரிந்த தன் முகத்தையே மற்றொருத்தியின் முகமெனக் கருதி, பயித்தியக்காரி, இவ்வளவு கள் இருக்கும் போது என் எச்சிலை நீ ஏன் குடிக்கிறாய்'' என்று சிரிக்கிறாள். இன்னொருத்தி தன் கண்ணின் நிழலை மதுக் கோப்பையில் கண்டு அதை வண்டு என எண்ணி விரட்டுகிறாள். வேறொரு பெண் சந்திரனின் நிழலைத் தன் மதுச் சாடியுள் பார்த்து ''வான்மதி! உனக்கு அபயம் தந்து விட்டேன். அரவுப் பகைக்கு இனி அஞ்சாதே!'' என்கிறாள். மது மயக்கத்தில் இருந்த மற்றொருத்தி வள்ளத்தைக் குப்புறக் கவித்துமதுவை முழுதும் கொட்டிவிட்டு கிண்ணத்தின் பின்புறத்தை வாயருகே வைத்துக் கொள்கிறாள். கழுநீர் நாளத்தை (தண்டை) இன்றைய உறிஞ்சு குழாய் போல (*Straw*) பயன்படுத்தி ஒருத்தி கள் உறிஞ்சுகிறாள். இவ்வாறு எல்லாம் அயோத்தி மாந்தரும் மகளிரும் கள் குடித்துத் தடுமாறு

கின்றனர்; இலங்கையிலோ தேறல் உண்டு ஆடுநர் பாடுநர் ஆகி களிக்கின்றுரை மட்டுமே அனுமன் காண்கின்ருன்.

இவை அனைத்தையும் காட்டிய கம்பன், மது நன்றி கொன்ற பாவத்திலும் ஒருவனை ஆழ்த்தும் என்றும் மது அருந்தினவனுக்குத் தாயென்றும் தாரமென்றும் கூட எந்தப் பேதமும் தெரியாது எனவும், நெளியும் புழுவை நீக்கி விட்டு மது அருந்தின பேருக்கு உய்யும் கதியே இல்லை என்றும் நஞ்சை விடக் கொடியது நறவு என்றும் விளங்க வைக்கிருன்.

நிறைவு :

மனிதன் மதுவைத் தீர்க்கிருன். மது இவன் மதியைத் தீய்க்கிறது. பழக்கம் வழக்கமாகி வெறியாகி அவனுக்கு முடிவாகவும் ஆகிவிடுகிறது. மனிதன் மதுவைக் குடித்த பழக்கத்திஞல், மது மனிதன் உயிரைக் குடித்து விடுகிறது!

" *At first Man takes the drinks*
*Then, Drinks take the Drinks*
*Finally Drinks take the Man* "

இந்த வாக்கியங்களைப் பார்க்கும் போது, உழைப்புக்கும் தொழிலுக்கும், மனிதன் மனிதனுகத் திகழ வேண்டிய பண்பாட்டுக்கும் மது முதல் எதிரி என்பது புரியும். எந்த நாட்டிலும், எந்தத் தப்பவெப்ப நிலையிலும் மது பொல்லாததுதான், அதிலும் நம் நாட்டிற்கு அது தேவையே இல்லை என்பது அண்ணல் காந்தியின் கருத்து.

மகாத்மாவும் மதுவிலக்கும் :

ஒருவனின் மனத்திண்மையைக் கெடுப்பதில் மதுவுக்கு நிகர்வேறு எதுவும் இல்லை. அண்ணல் காந்தியின் உரைகாரர் என்று கூறப்படும் இராஜாஜியும் "எந்தநல்லரசும்

குடியை அனுமதிக்கக் கூடாது'' என்றார். மது குளிருக்கு நல்லது, கவலைக்கு மாற்று மருந்து என்பதெல்லாம் போலிச் சமாதானங்கள்- உழைப்பாளியின் உடல் திறனைப் பெரிதும் கெடுப்பது குடியாகும். இந்த உண்மையை ஜப்பானியர் நன்கு உணர்ந்துள்ளனர். மதுவினால் மதிமோசம் போகாதவர் ஜப்பானியர், அவர்களுடைய உழைப்புத் திறன் உலகு போற்றும் ஒன்றாகத் திகழ்கிறது. ஹிட்லர் மதுவருந்தியதே இல்லையாம். மது உண்ணல், காமம், சூது, பொய் இவையெல்லாம் பாவங்கள் என்று அறநூல்கள் பேசும். சங்க காலத்தில் கள் ஆறாக ஓடியது என்ற நிலைமையையும் இலக்கியங்களில் கண்டோம். அற நூல்கள் பலவற்றிலும். சமணரும், பௌத்தரும் இக்குடியைப் பெரிதும் களைந்தனர், எதிர்கால உலகம் குடி கெடுக்கும் குடியை வெறுக்க வேண்டும் என்பதற்காகவே கம்பன் பலவாறு அதன் தீமைகளை எடுத்துரைத்திருக்கிறான்.

# 3 கற்பும் பெண்மையும்

வள்ளுவர் சில பொருள்களை அறுதியிட்டு உறுதியாக உரைப்பார். வாய்மையின் சிறப்பை வலியுறுத்த 'யாம் மெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத் தொன்றும் வாய்மையின் நல்லபிற' என்பார். 'பொய்யாமை பொய் யாமை ஆற்றின் அறம்பிற செய்யாமை செய்யாமை நன்று' என்று அழுத்தம் தருவார். வறுமையை விடக்கொடியது எது என்று கேட்டு வறுமையைவிடக் கொடியது வேறெதுவு மில்லை, வறுமைதான் என்று முடிப்பார்.

> 'இன்மையின் இன்னாதது யாதெனின் இன்மையின்
> இன்மையே இன்னா தது'

இதைப்போலவே. பெண்ணைவிடக் சிறந்த பொருளில்லை என்பதையும் அழகுற விளக்க;

> 'பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
> திண்மை உண்டாகப் பெறின்'

என்றார். ஆம்! கற்பு என்பதே பெண்மையின் சிறப்பு, அது உள்ள பெண்மையை அந்தப் பெண்ணை விடப்பெரிய தொன்றுண்டா? 'பெண் ணிற் பெருந்தக்கது இல். என்று நாமும் வள்ளுவனுடன் சேர்ந்து குரல் கொடுக்கிறோம். அந்தக் கருத்தின் வழியே பாரதியும் 'பெண்மை வாழ்க என்று கூத்திடுவோமடா' என்றார். பெண்மை எப்போது வாழும்? எப்போது சிறக்கும்? எப்போது தொழப்படும்? கற்பு என்னும் கலங்காத்திண்மை உள்ளபோதுதானே! கல்+பு=கற்பு என்று பகுத்துப் பொருள் காட்டிக் கற்பிக்கப்படும் ஒழுக்கம் என்பர். தாய் அதன் பின்னர், கணவன், சமுதாயம் இவற்றால் கற்பிக்கப்

படும் ஒழுக்கம் கற்பு என்று கொள்வதில் தவறில்லை. இந்த ஒழுக்கம் பெண்ணுக்குமட்டும் என்று பேசப்பட்டதை மாற்றி ஆணுக்கும் கற்பு நிலை காட்டியவர் கம்பர். இராமன் சீதையைத்தவிர மற்றொரு பெண்ணைச் சிந்தையால் கூடத் தொடமாட்டேன் என்றிருந்த செம்மல். ஏகபத்தினி விரதன். தசரதன் அறுபதினாயிரம் தேவியருடன் வாழ்ந்தவன். அவன் மகன்

'இந்த இப்பிறவிக் கிருமாதரைச்
சிந்தை யாலும் தொடேன்'

—என வாழ்ந்தது பெருமை சீதையைத் தவிரப் பிறமகளிருக்கு அவன் கண்கள் 'நஞ்சு எனத் தகையன' என்பது அனுமன் கூற்று. சூர்ப்பனகை யிடம் இராமன் பேச்சுக் கொடுத்ததே அவளது வஞ்ச மனத்தைப், போலிக்காதலை வெளிப்படுத்தத்தான். அவள் பால் எந்தவித நேயமும் கொள்ளவில்லை. இராமன் தம்பி இலக்குவனனும் பிறன்மனை நோக்காத பேராண்மையாளன். பெண்கள் கூட்டம் வழிமறித்து நின்றால் இடையிலே புக மாட்டான். ஒதுங்கி, நாணி, முகம் சாய்த்து நிற்பான்.

கார்காலம் முடிந்தும் வானரப்படையுடன் சுக்கிரீவன் வரவில்லை. மதுவெறியில் மதிமயங்கி நின்றான். இராமனால் ஏவப்பட்ட இளைய பெருமாள் கிட்கிந்தை வந்தபோது எதிரே நின்ற வானர மகளிர் முகம் காணவும் நாணித் 'தாமரை வதனம் சாய்த்து, தனு நெடுந்தரையில் ஊன்றி, மாமியர் குழுவில் வந்தானும் என' மயங்கி நின்றான் என்பார் கம்பர். சீதையின் பாத அணியாம் சிலம்பு தவிர மற்றறியாதவன் இந்த இளையபெருமாள் என்று வான்மீகி காட்டுவதும் இளவலின் பண்பின் ஏற்றமே. 'வையம் ஈந்தும் போகா உயிர்த்தாயர் நம்பூங்குழல் சீதை' என்று

சுமித்திரை கூறிச் சீதையை இளையபெருமாளுக்கு அன்னை என்றாள். அந்த அன்னையை வணங்கும்போது பாத அணியை மட்டுமே இளையபெருமாள் பார்த்திருக்கிறான்.

இராமனும் இலக்குவனும் பண்புமிக்க கோசல சமுதாயத்தில் பிறந்து வாழ்ந்து வருவதால் இத்தகைய பண்பு நலத்தோடு இருக்கிறார்கள். ஆனால் காட்டு வேடன் குகனிடமும் இந்தக் கற்பை அழகுறக் காட்டிவிட்டானே கவிச்சக்கரவர்த்தி! பரதன் குகனைச் சந்தித்து அண்ணன், அண்ணி இளவல் இவர்களைப்பற்றி வினவுகிறான். அண்ணன் அண்ணி எவ்வழி உறைந்தனர் என்றும், எங்கு உறங்கினர் என்றும் கவலையுடன் கேட்கிறான் குகன் 'நம் அண்ணனும் அவனுடைய தேவியும் உறங்கினார்களே தவிர, இளைய பெருமாள் உறங்கவேயில்லை' என்று கூற வருகிறான்.

'அல்லையாண்டமைந்த மேனி அழகனும் அவளும் துஞ்ச,' இளவல் காவலிருந்தான் என்கிறான். இந்த 'அவளும்' என்ற சொல் ஏன்? இராமனுக்கு அழகன் என்ற பெயர் கூறி, இருள் போன்ற கரிய திருமேனி அழகன் என்று அடையுடன் கூறிய குகன் சீதையை 'அவள்' என்றதுடன் நிறுத்துவானேன். இராமன் அழகைக்கண்டு மகிழ்ந்ததால் அவனுடைய அழகை விவரித்த குகன், சீதையைச் சரிவரக் கண்டதில்லை என்பதாலேயே 'அவள்' என்று மட்டும் கூறி நிறுத்தினான் எனலாம். இப்படி ஆடவர்களுக்கும் கற்பை வலியுறுத்திக் கம்பன் பாத்திரப்படைப்பைச் செய்துள்ளான்.

அப்படியிருக்க, மங்கையர் மனத்தவமாம் கற்பைக் கம்பன் விவரிக்காமலிருப்பானா? கணவன் உயிர்நீத்தபின் உயிர்வாழ விரும்பாத உடன் உயிர் நீக்கும் பெண்கள் உளர். காப்பியத்தில் தசரதன் இறந்ததும் அவனுடன் உயிர் துறக்க உடன் கட்டை ஏறிய ஆறுபதினாயிரம் மகளிரையும், இராவணன் இறந்ததும் உயிர் நீத்த மண்டோதரியையும் இவ்வகையினர் எனலாம். கணவன் இறந்த பின்னும்

கைம்மை காத்துக் கடமைக்காக வாழ்ந்த பெண்களும் உளர். இராமனுக்காக அவனதுதாய் கோசலையும், பரதனுக் காகக் கைகேயியும், இலக்குவ சத்துருக்கனருக்காக சுமித்திரையும் அங்கதனுக்காகத் தாரையும் வாழ்ந்தனர்.

வாலியின் மரணத்தின்பின் தாரை, சுக்கிரீவனுடன் இன்புற்று வாழ்ந்ததாக வான்மீகம் காட்டா நிற்க, அதை மாற்றியமைக்கிறான் கம்பன். குரங்குப் பெண்மையிலும் கற்புத்திண்மை உண்டென்பது கம்பன் அறிந்துள்ள பாங்கு, குறுந்தொகைக் காட்சியை நன்கறிந்த கம்பன் தன்னுடைய காப்பியத்தில் அதை நினைவு கொண்டு இக்குரங்குப் பெண் மையைச் செவ்விதாய்ச் சித்தரித்துள்ளான். கடவுளரோ, தேவரோ, மானுடரோ, விலங்கோ, பறவையோ எந்த வகையில் பாத்திரம் படைக்கப் பெற்றாலும் அதன்வழி காப்பிய ஆசிரியன் நமக்குப் பாடம் புகட்ட, அறிவுரைகூற இலட்சியம் காட்ட நினைக்கிறான்.

ஒருதலைவியின் தலைவன் இருட்டுவழியில் வந்துதிருட்டுத் தனமாக அவளைச் சந்தித்து வருகிறான். அவனைத்தடுத்து, விரைவில் வரைந்து (மணந்து) கொள்ளத் தூண்ட வேண்டும். பீடிகைபோட்டுப் பேசுகிறாள் தோழி; ஒருகதை போலச் சொல்கிறாள். 'ஒரு குரங்குக்குடும்பம் தலைவனும் குரங்கு ஒருநாள் மலையினின்று வீழ்ந்திறந்தது. பெண் குரங்குதலைவனைப் பிரிந்து, 'கைம்மை' நோன்பு கொண்டு வாழ விரும்பாத அளவு பாசமுள்ளது. 'தலைவன் உயிர் சென்ற வழியில் நானும் என் உயிரைச் செலுத்திச் சேர்வேன் என்றுமுடிவு கொண்டு, மரம் தாவக்கூடக் கல்லாத தன்சிறு குட்டிகளை உறவினரிடம் சேர்த்து அதே மலையினின்று வீழ்ந்து இறந்தது. இத்தகைய நாட்டை யுடைய தலைவா-குரங்குத் தலைவிகூடத் தன் தலைவனுக்கு ஊறு என்றால் உயிர்வாழாதே. உனக்கு ஏதாவது ஒன்று நேர்ந்தால் தலைவி உயிர்தரிப்பாளா ஆகவே நீ இரவில் இவ்வழியில், கொடிய காட்டுவழியில் வராதே என்பது

குறுந்தொகையில் வன்பரணர் காட்டும் ஓவியம். குரங்குப் பெண்மையில் கற்புதிண்மை கண்டான் கம்பன். அதை ஒட்டியே தன் தாரையைப்படைத்தான்.

அழகு, அரசியலறிவு, முன்யோசனை, சொற்றிறம், கணவன்மீது அன்பு, எல்லாம் நிறைந்த தாரையைக் கம்பன் காட்டும் விதமே தனித்தது வாலிக்கும் தாரைக்கு மிடையே இருந்தஅன்பின் ஆழம் அளவிடற்கரியது ஈருடல் ஒருயிர் என்பது உபசார வழக்கன்று உண்மையே என வாழ்ந்திருக்கின்றனர்.

கணவன் வாலியைத் தடுத்து, சுக்கிரீவனுடன்போரிடப் போக வேண்டாம் என்ற போது அறிவுப் பிழம்பாகக் கண்ட தாரையை, வாலி மடிந்து கிடக்கையில் புலம்பும் போது அன்புப் பிழம்பாய்க் காண்கிறோம். அவலம், பதி பக்தி, பாசப்பிணைப்பு, பெருமிதம், நயத்தக்க நாகரிகம் இவையனைத்தும் ஒருசேரப் புலம்புகிறாள். கணவனின் மரணத்திற்குக் காரணமான இராமனை ஒருசொல் பழித்துப் பேசாத பண்பையும் பார்க்கிறோம். வாலியின் வீரம், தோள் வலி, அமுதுகடைந்து பிறருக்கு (தேவருக்கு) ஈந்த உபகாரம், சிவநேயம் அனைத்தையும் பாராட்டிப் புகழ்ந்து பேசுகிறாள். "என் ஆவி" என்று என்னைப் பார்த்துச் சொன்னீர்களே. அது பொய்யா! நீர் பொய் யுரையாத புண்ணியரல்லவா!

'நாமிருவரும் ஒருவர் சிந்தையுள் மற்றவர் வசிக்கிறோம்' என்றீரே! உம் நெஞ்சில் நானிருந்திருந்தால் பகைவனின் அம்பு என்னைத்தானே முதலில் துளைத்திருக்கும்; என் நெஞ்சில் தாங்கள் இருந்தால் பிழைத்திருப்பீரே!

'செருவர் தோள!நின் சிந்தை உளேன்எனின்
மருவர் வெஞ்சரம் என்னையும் வவ்வுமால்
ஒருவே னுள்உளை யாகில், உய்தியால்
இருவே முள்இரு வேமும் இருந்திலேம்'

என்றெல்லாம் புலம்பி அழுகிறாள். இந்த அன்பிற்கு ஏற்ற வகையில் தாரை பின்னரும் நடப்பதைக் காப்பிய அமைப்பில் காண்கிறோம். வான்மீகத்தாரை, சுக்கிரீவனின் இன்பக் களியில் உடன் பங்கு பெற்றிருந்ததாக அமைந்திருக்கக் கம்பன் அதைமிக அற்புதமாக மாற்றிதாரையைக் கைம்மையின் கண்ணியத்துடன் சித்தரிக்கிறான்.

சுக்ரீவன் நன்றி மறந்தான் என்று எண்ணி இளையவனைக் கிட்கிந்தைக்கு அனுப்புகிறான் இராமன். ''வாலியைக் கொன்ற அம்பு என்னும் கூற்றம்'' இங்குத்தான் இருக்கிறது. என்று எச்சரிக்கை செய்யவும் சொல்கிறான். தாரையை வானரமகளிருடன் அனுப்பி இளவலின் வழியை மறித்து நிற்கவைக்கிறான் அனுமன். எதிரே நின்ற தாரையின் கோலம்,

*''பார்குலா முழுவெண் திங்கள் பகல் வந்த படிவம்''*

போல ஒளியிழந்து காணப்படுகிறது. சீற்றம் குறைந்து அருள் பிறக்கிறது இலக்குவனுக்கு.

*''மங்கல அணியை நீக்கி மணியணி துறந்து வாசக்*
*கொங்கலர் கோதை மாற்றிக் குங்குமம் சாந்தம் கொட்டாய்*
*பொங்குவம் முலைகள் பூசக் கழுத்தொடு மறையப் போர்த்த*
*நங்கையைக் கண்ட வள்ளல் நயனங்கள் பனிப்ப*
*நின்றான்''* (5)

தாரையின் விதவைக் கோலம் கண்டதும் 'இளையராம் எனை ஈன்ற தாயர்'' என்று தன் தாய்மார்களை எண்ணிக் கண் கலங்கினான். என்ன அருமையான மாற்றம்! இந்த இடத்தில் கவிஞனுக்குஇருவகையில் இக்காட்சிபெருவெற்றி தருகிறது இளைய பெருமாளின் பண்பு நலன், தாரையின் பெண்மையின்சிறப்பு இரண்டும் புலனாகிறது. இளையவனின் சீற்றம் குறைவதுடன், தாரையின் கைம்மைக் கோலக் காட்சியும் உலகுக்கு வெளிப்பட்டு விடுகிறது.

அரக்க இனமானுல் என்ன, குரங்கினமானுல் என்ன மானுடப் பெண்ணுனுல் என்ன? எங்கெல்லாம் பெண்மை கற்புத் திண்மையுடனிருக்கிறதோ அந்தப் பெண்மை உலகோரால் தொழப்படும் என்ற உண்மையைச் சங்ககால முதற்கொண்டு இன்றுவரை கண்டு வருகிறோம். என்றும் இது நிலைத்த உண்மைதான்!

# 4 அறம் வெல்லும்; பாவம் தோற்கும்

அறம் முடிவில்லாதது. அதற்கு அழிவே கிடையாது. அந்த அறம் ஒன்றே நிலைத்த இன்பம் தரும். ''அறத்தான் வருவதே இன்பம்." என்பது வள்ளுவர் வாய்மொழி. 'அறம் என்பதில் பொருள் ஏதுமில்லை. அது பலவீனர்களைப் பயமுறுத்தும் வெறும் மிரட்டல்' என்பது போலி வாதம். அறம்' என்பதன் முழுத்திறனையும் நன்கு உணர்ந்தவன் அனுமன். அனுமனால் குத்தி வீழ்த்தப் பெற்ற இலங்கை மாதேவி (இலங்கிணி), 'அறம் வெல்லும், பாவம் தோற்கும்' என்கிறாள். இது அனுமனுக்கு அவனது மனச்சான்றின் குரல்போலவே ஒலித்திருக்க வேண்டும். இலங்கிணி வாயிலாக இக்கருத்துச் சொல்லப் பெற்றாலும் இராமா வதாரக் காப்பியம் முழுவதும் ஊடுருவி நிற்பது இந்த உண்மையே! இராமாயணத்தின் 'பாவிகம்' (காவியநீதி) இதுதான்.

முனிவர்களின் தவத்தைக் கெடுத்து, வேள்விகளை அழித்து, உயிரினங்களைக் கொன்று வயிற்றுப்பள்ளத்தை நிரப்பிப் பாவமலை குவித்துவந்தவள் தாடகை. மூவுலகை யும் தன் குடைக்கீழ்க் கொணர்ந்து, தர்மத்தை மறந்து மறம்தரு தீ நெறியில் ஆண்டவன் தசமுகன். சீதை பிறன் மனைவி என்றறிந்தும் வஞ்சனையால் கவர்ந்து வந்த பாவி அவன். தம்பிக்கு இரக்கம் காட்டாமல் அவனை ஓட ஓட விரட்டிக் கொல்ல முயன்று துரத்தியடித்தவன் வாலி. தம்பியின் மனைவி உருமையையும் அபகரித்தவன். இவர் கள் எல்லோரும் இறுதியில் பெற்ற பயன் என்ன? அடைந்த இன்பம் என்ன?

தன் எதிரே போரிடுபவன் தசமுகன். அரன் இருந்த வெற்பினை எடுத்த ஆற்றலான். வரபலம் உடையவன். சங்கரன் கொடுத்த வாளினன். என்பதெல்லாம் தெரிந்தும், முக்கனறித் தனக்கு வேறு படைக்கலமில்லாத நிலையிலும் அந்தக் கிழட்டுக் கழுகரசன் சடாயு, 'சரண்' என்று அழுத சானகியின் துயர் தீர்த்தலே தனக்கு அறம் என்று, இயன்ற வரை போரிட்டு, உயிர் நீத்தான். அவன் அற வோன். அன்பால் மிக்க அறவோன். "நீள்நிலை அறநெறி நின்றுளோர்க்கெலாம் ஆணி அவன்", என்பது சானகி யின் பாராட்டு- தோல்விச் சுவையை இராவணனுக்குத் தந்தவனே சடாயுதான். 'தோற்றனை பறவைக்கு, அன்று; தள்ளுநீர் சடையில் ஏற்றான் வாளினால்தானே வென்றாய்' என்று பாராட்டி கூட இராவணனிடம் அவனது தோல்வி யைச் சுட்டிக் காட்டுகிறாள். அறவழி நிறை அன்பன் சடாயுவுக்குக் கிடைத்தது 'தெய்வ மரணம்' அந்தத் தெய்வ மரணத்தின் பலனாக, இராமன் கையால் ஈமக் கடன்கள் செய்யப் பெறுகிறான்.

மறச் சூழலில் வாழ்ந்த வீடணன், குணத்தால் உயர் கிறான். அண்ணனின் செயல்முறை கேடானது என்று உணர்ந்து சாம, தான, பேத, தண்ட உபாயங்களால் எடுத்தும், இடித்தும் உரைக்கிறான். அறிவிலியாம் இலங்கை வேந்தனோ அவனைக் 'கொல்வேன்' என்று எழுகிறான். அறத்தைச் சார்ந்து வாழ முற்படும் வீடணன், தன்சுற்றம், அண்ணன், மனைவி, மக்கள் அனைவரையும் துறந்து ஓடி வருகிறான். அறமே வடிவான இராமன்பால் சேர மனம் விழைகிறது என்பதை அழகாகக் கூறுகிறான்,

'அறம்தலை நின்றவர்க்கு அன்பு பூண்டனன்;
மறந்தும் நன்புகழலால் வாழ்வு வேண்டலன்"

என்று கூறிச் சென்று,

''தருமமும் ஞானமும் தவமும் வேலியாய்
மருவரும் பெருமையும் பொறையும் வாயிலாய்,
கருணையம் கோயிலுள் இருந்த கண்ணனை
அருள்நெறி எய்திச்சென்று அடிவணங்கினான்.''
(6—4—47)

இராமன் எனும் தெய்வம் வீற்றிருக்கும் கோயில் கருணை என்பது. அதற்குப் பெருமையும், பொறுமையுமே வாசல். தருமம், ஞானம், தவம் இவை வேலியாம். இந்தக் கோயிலுக்குப் போகும் வழியோ அருள் எனும் வழியாம்.

''அறவினை இறையும் இல்லா, அறிவிலா அரக்கன் என்னும் பிறவியின் பெயர்ந்தேன். பின்னும் நரகினின் பிழைப்பதானேன்,'' என்று பூரிக்கின்றான். ''அரக்கர் அறிவற்றர். அறவினையற்றவர். பிறவியாம் மீளா நரகில் உழல்பவர். நான் அறக்கடலில் மூழ்கியதால் பிறவா நரகினின்று உயர்ந்தேன்'' என்பது - பாவச் சேற்றிலிருந்து விடுதலை பெற்ற ஆத்மாவின் விடுதலைப் பாட்டு.

இந்தவீடணனை இந்திரசித்தன், நிகும்பலையாகப் படலத்தில் சீறிச் சினத்து இகழ்ந்து பேசுகிறான். மானமற்று மாற்றானிடம் பணிந்து உயிர்சுமந்து வாழ்பவன் எனவும் பழிக்கிறான்.

இவனது அறியாமை கண்டு சிரிக்கிறான் வீடணன். புன்முறுவலுடன் சில உண்மைகளை எடுத்துரைக்கிறான்;

''வெல்விது பாவம்; சாலதி தருமமே விழுமித்து ஐய!''

''அறம்துணை யாவதல்லால், அருநாகு அமைய நல்கும் மறம்துணை யாகமாயாப்பழியோடும் வாழமாட்டேன்'

''தருமம் நோக்காத உங்களைப்புகழ் வந்தடைந்தாலும்' அடையட்டும். (நிச்சயம் புகழ் வராது!) அறத்தைத் தேறும் எம்மைப்பழி வந்து சேர்ந்தாலும் சேரட்டும். அறத்தைக் கைவிட மாட்டோம்.

"அறத்தினைப் பாவம் வெல்லாது என்னும் அது
அறிந்து ஞானத் திறத்தினும் உறும்'' என்றுஎண்ணித்
தேவர்க்கும் தேவைச் சேர்ந்தேன்.''

இந்த வாக்குமூலம் உலகுக்சேயன்றி இந்திரசித்தனுக்கல்ல.
இராமகாவியம் 'அறத்தினது இறுதி வாழ்நாட்கு இறுதி'
என்பதை அழுத்தற எச்சரிக்கிறது.

அறம்தான் அன்றும், இன்றும் என்றும் வெல்லும்.
'தருமத்தின் வாழ்வுதனைச் சூது கவ்வும்; தருமம்
மறுபடியும் வெல்லும்' என்பது பாரதி வாக்கு. பெரும்
கொலை வழியாம் போர்வழி இகழ்ந்த எம்மான் காந்தியின்
'தர்மம் வெல்லும்' என்ற வாக்குப் பொய்த்ததா! காலம்,
மாறினும் இக்கருத்து மாறுவகையில் காலத்தையும்,
வென்று நிற்கிறதே!

## பிறன்மனை நயத்தல்

'பிறன்மனை நோக்காப் பேராண்மை' ஆணின் கற்பு
'எளிதென இல்லிறப்பான் என்றும் அழியாப்பழியடைவான்
'பிறனில் விழைவான் கிளையொடும் கெடுவான்' – இதை
எச்சரிக்கை செய்யவே இராமாயணத்தில் இராவணன்
என்னும் பாத்திரம் திகழ்கிறது. சிறந்த அரசன்; அறிஞன்
நாவீறு படைத்தவன். நன்மைகள் பல பெற்றவன். நாட்டு
மக்களுக்குத் தண்ணளியான்; செங்கோலான். மங்கையர்
மனத்தை ஈர்க்கும் இருபது தடந்தோளான். திக்கயங்களை
வென்ற பெருவீரன். அன்புத்தந்தை. பாசமிக்க அண்ணன்
பலர்போற்றப் பாராண்டவன். சிவநேயச்செல்வன். இசைக்
கலைஞன்: கொடைஞன். கம்பன் தனது காவியத்தின்
எதிர்நிலைத் தலைவன் (Antagonist) இராவணனை இத்துணை
மாட்சியனாகப் படைத்துக் காட்டியுள்ளான். இவனுக்கு
அழிவு காலம் என்று தொடங்கிற்று தெரியுமா! என்று
சூர்ப்பனகை இவன் காலில் விழுந்து மூக்கறுபட்ட கோலத்

துடன் அழுது, பின் அழகி சீதையின் அவயவங்களைப் பற்றி விவரித்தாளோ, அதைக் கேட்ட அன்றேதான்!

"மயிலுடைச் சாயலாளை வஞ்சியா முன்னம் நீண்ட
எயிலுடை இலங்கை நாதன் இதயமாம் சிறையில் வைத்தான்
அயிலுடை அரக்கன் உள்ளம் அவ்வழி மெல்ல மெல்ல
வெயிலுடை நாளில் உற்ற வெண்ணெய்போல்
வெதும்பிற் றன்றே" (3. 7. 85)

இதயச்சிறையில் சீதையை வைத்ததே அவன் அழிவுக்கு அடிகோலிற்று. வெயிலிடைப்பட்ட வெண்ணெய் உருகுவதுபோல் இவனது வலிய நெஞ்சு கரைந்துருகி வெதும்பலாயிற்று. குறுந்தொகையில் தலைவிபால் ஏற்பட்ட மையல் நோயைத் தடுக்க இயலாத தன் நிலையை ஒரு தலைவன் பாங்களிடம் கூறுமாப் போல் அமைந்த ஒரு பாடல் உண்டு. அதில்வரும் அழகிய உவமை ஒன்று; 'ஒரு பாறை. நடுப்பகல் நேரம். சூரியன் காய்ந்து கொண்டிருக்கிறான். பாறைமீது வெண்ணெய் எதிரே கையில்லாத ஊமையன். தன் கண் எதிரே பாறையில் கதிரவன் வெம்மையால் உருகிப் பாய்ந்து ஓடும் வெண்ணெயைக் காண்கிறான். கையில்லை தடுத்து எடுத்து வைக்க. பிறரை அழைத்திடவோ இயலாத ஊமை. கண் எதிரே யிருந்தும் வெண்ணெயைக் காக்க இயலாதகையில் ஊமனின் நிலை போல் தன்னுடைய நிலை உள்ளது" என்கிறான்.

'கையில் ஊமன் கண்ணிற் காக்கும்
வெணணெய்;

இதே நிலைதான் இலங்கை வேந்தனின்நிலை. பரந்து சென்று உயிரில் கலந்து விட்டது, காமம். வெயிலிடை வைத்த வெண்ணெயென உருகுகிறது. வெதும்புகிறது உள்ளம். தடுக்கலாற்றாதவனைத் தவித்துக் காமமே வடிவாகி விடுகிறான். மதியிலி மறையச் செய்ததிமை போலக் காமம் பல்கிப்பெருகி வளரலாயிற்று. கண்டதுர

காதல் என்று கூறுவர். ஆனால் கேட்டதும் காதல் கொண்டான் தசமுகன். காதல் என்பதைவிட அதனைக் 'காமம்' என்பதேதகும். தூய அன்பைவிட அவளை எப்படியும் அனுபவித்து விடத் துடிக்கும் வெறி என்பதே மிகுதியாயிற்று.

முதன்முதலில் அவனுக்கு அறிவுரை கூறியவன் மாரீசன்

'நாரம் கொண்டார் நாடுகவர்ந்தார், நடை இல்லா
வாரம் கொண்டார்; மற்றொருவர்க்காய் மனைவாழும்
தாரம் கொண்டார்; என்றிவர்தம்மைத் தருமம்தான்
ஈரும் கண்டாய் கண்டகர் உய்ந்தார் எவர் ஐயா!
(3—8—11)

பிறர் நாட்டை அநீதியால் அன்பற்றுக் கவர்ந்தவர், நீதிமுறைக்கு மாறாக நடந்தவர், பிறர் மனைவியைக் கவர்ந்தவர் இவர்களைத் தருமதேவதை வாளால் அறுத்துவிடும். சமுதாயத்தை முட்போலத் துன்புறுத்தும் பாதகர்களில் உய்ந்தவர் யாவர்? என்கிறான். தென்றல் நரிக்குப்பிடிக்காது. நல்ல அறிவுரைகள், நாசமடையப் போகிறவனுக்குப் பிடிக்காது.

அடுத்து இராவணனின் தம்பி கும்பகருணனும் இது போலவே இடித்துரைக்கிறான். "காமம் பேணுபவனுக்குப் பெருமை ஏது?

'ஆசில் பர தாரமவை அஞ்சிறைய டைப்பேம்
மாசில் புகழ் காதல் உறுவேம் வளமைகூரப்
பேசுவது மானம்இடை பேணுவது காமம்
கூசுவது மானுடரை நன்றுநம கொற்றம்' (6—2—52)

"ஓவியம் அமைந்தநகர் தீஉண உளைந்தாய்
'கோவியல் அழிந்ததென்' வேறொரு குலத்தோன்
தேவியைநயந்துசிறை வைத்த செயல் நன்றோ?
பாவியர் உறும்பழி இதின்பழியும் உண்டோ"
(6—2—49)

ஊர் எரியுண்டது குரங்கால் அன்று; வேறொருவன் மனைவியைச் சிறை வைத்த பாவத்தால் என்று காட்டினான். பிறன்மனை நயப்பது பாவம்; பழி; என்றான். சானகியின் கற்புத்தீயால்தான் இலங்கை வெந்தது என்பது வீடண னுக்கும் உடன்பாடே, தசமுகனின் சுற்றத் தினர்பலரும், அருமைத்தம்பியும், அன்புமக்களும், அருமருந்தனைய அமைச்சரும், படைத்தலைவரும் இறந்தமை சீதையால் என்று மண்டோதரியும் கதறினாள்.

'சீதையால் வருவ இன்னும் சிலவேயோ!' என்றாள் தானியமாலை. இராவணனின் படிப்படியான வீழ்ச்சிக்கும், அழிவுக்கும் காரணம் என்று காட்டுவது அவன் பிறன்மனை விழைந்த பாவத்தையே! தன்னுடையதல்லாத ஒன்றைத் தனது என்று கொள்ள முயன்ற மயக்கம் அவனை அழிவுப் பாதையில் இழுத்து சென்றது.

முடிவில் இராமபாணம் தசகண்டன் உடலைச்சல்லடைக் கண்ணாகத் துளைத்து வீழ்த்திற்று. எல்லாம் 'அடங்கி' வீழ்ந்தான் தசமுகன். இராமபாணம் தசமுகனின் உயிர் இருக்குமிடத்தை நாடியா துளைத்தது. இல்லை: சானகியை மனச்சிறையில் கரந்து வைத்திருந்த காமம் இருக்கிறதா என்று ஊடுருவித் தேடிப்பார்த்து, அங்குக் காமம் இல்லை என்றபின் தான் வெளியே வந்ததாம்.

*மனச்சிறையில் கரந்த காதல்*
*உள்ளிருக்கும் எனக் கருதி*
*உடல்புகுந்து தடவியதோ ஒருவன் வாளி?"*

என்கிறாள் மண்டோதரி. உயிர் போகும் நேரம் காமம் அறவே போயிற்று போலும். சீதையைத் தழுவ நினைத்து மரணத்தைத் தழுவினான் – 'உயிர் கொடுத்துப் பழி கொண்ட பித்த' னென்றான் வீடணன்.

'ஓர் ஆசை ஒருவன் மேல் உயிர் ஆசைக்
குலமகள்மேல் உடைய காதல்
தீர்; ஆசைபழி, என்றேன்

என்றும் வீடணன் புலம்புகிறான்' இந்த ஒரு குறை எவ்வளவு பெரியவன் எவ்வளவு இழிந்தவனாக்கிற்று 'பித்தா' என்ற வீடணன் சொல்பழிச் சொல் அன்று; இரக்கத்தால் வரும் அனுதாப வார்த்தைதான். இப்படிப்பல பாத்திரங்கள் வாயிலாகப் பிறனில் விழைவதின் தீமை பேசப் பட்டது. அறநூல்கள் பலவும் பிறனில் விழையாமையை வலியுறுத்துகின்றன. வாலியின் அழிவுக்கும் உருமையை அவன் கலர்ந்தது ஒருகாரணம் என்று இராமன் கூறுகிறான்.

ஈரமாவது இற்பிறப் பாவதும்
வீரம் ஆவதும் கல்வியின் மெய்நெறி
வாரம் ஆவதும், மற்றொருவன் புணர்
தாரம் ஆவதைத் தாங்கும் தருக்கதோ?'' (4. 7. 10)

அன்றும்இன்றும், என்றுமே பிறன்மனைநயத்தல்பெருங் குற்றமே. அது சமுதாயத்துரோகமாகும். இது ஒருவகையில் திருட்டுத்தான். திருட்டுத்தனமான ஆசை குருட்டு மனத்தில் எழுவது இப்படிப்பட்ட காமம் உடையவன் பொய்யனும் ஆவன். உண்மை என்பது உள்ளத்தில்உள்ளது. அதை மறைத்து ஒழுகுபவன் பொய்யனே. நெஞ்சுக்குள் பேசும் மனச்சான்றின் குரலைக் கேட்கமறுத்து நடப்பவன் பொய்யன்தானே! இவர்கள் சமுதாய அமைதியை, ஒழுக்கத்தை அடுத்தவர் வாழ்வின் அமைதியைக் கெடுக்கும் புல்லர் என்றும் இவர்களைச் சமுதாயம் ஒதுக்கி, ஒறுக்க வேண்டும்.

# 5 நால்வர் எழுவர் ஆனமை

செய்தித்தாளைக்கையில் எடுத்ததும் கண்ணில்படும் சில தலைப்புக்கள் :

நிலத்தகராறில் அண்ணனுக்குக் கத்திக்குத்து; தம்பி கைது; தம்பி கொலை — அண்ணன் தலைமறைவு' 'சாதிக் கலவரம் – துப்பாக்கிச்சூடு 7 பேர் பலி' என்பதெல்லாம் தாம். பத்திரிகைகளில் வராமல்போன தகராறுகள் எத்துணையோ! மனித சமுதாயம் தற்கால வாழ்வை நோக்கிப் பின்னிடுகிறதோ என்று கூடக் கலங்க வேண்டி யுள்ளது. சகோதர பாசம், ஆன்மநேயம் என்றெல்லாம் அருளாளர்கள் வலியுறுத்தியதை, அண்ணல் காந்தியின் லட்சியத்தை மன்பதை உலகு மறந்துவிட்டது! உயர்ந்தாரும் தாழ்த்தாரும் இல்லாத 'ஒத்துரிமைச் சமுதாயம்' இராம ராஜ்யத்தில் தான் திகழ்ந்திருக்கிறது. அது என்றும் வேண்டியதொன்றே

'ஒரு புதல்வன் கிடைக்கமாட்டானு? என்று ஏங்கித் தவித்த தசரதன் மகப்பெறு வேள்வி செய்து நான்குவேதம் போல நான்குப் புதல்வர்களைப் பெற்றுன். விராவரும் புவிக்கெல்லாம் வேதமேயனைய இராமன் மூத்தவன். ஒரு நட்சத்திர இடைவெளியில் இவர்கள் அடுத்தடுத்துப் பிறந்திருக்கின்றனர், புனர்பூச விண்மீனில் இராமன் அவதாரம் செய்ய, பூசத்தில் பரதனும், ஆயில்யத்தில் இலக்குவனும் மகநாளில் சத்துருக்கனனும் தோன்றினர். தம்பிகள் அண்ணனும் இராமனிடம் வைத்திருந்த மதிப்பும், அன்பும், பக்தியும் பெரிது. வயதால் இராமன் மிகப் பெரியவன் போலும் என்ற எண்ணத்தை ஏற்படுத்துவது. இராமனும் 'தம்பியர் அல்லது தனக்கு வேறுயிர் இம்பரில்

இல் என' எண்ணி வாழ்ந்தவன் என்பது வாலி கூறு. நெய்குழலூறு இழையென (ஊடும்பாவும்போல) இணைந்தே இருந்தவர் இராம இலக்குவர் 'பரதனும் இளவலும் ஒரு நொடி பகிராது' இரதமும் இவுளியும் ஏறும் போதும், மறை நூல் ஓதும்போதும் சேர்ந்தே இருந்தனர், என்பார் கம்பர்.

## இராமனின் பண்பு

கைகேயி வரம்கேட்டுப்பெற்று, முடிசூட்டுவிழாவன்று காலை இராமனை அழைத்து,

'ஆழிசூழ் உலகமெல்லாம் பரதனேஆள நீபோயத்
தாழிருஞ் சடைகள் தாங்கித் தாங்கரும் தவமேற்கொண்டு
பூழிவெங் கானம்நண்ணிப் புண்ணியத் துறைகள் ஆடி
ஏழிரண் டாண்டில் வாவென் றியம்பினன் அரசன்'

என்றாள்! (2. 3. 111.)

இதைக்கேட்ட இராமனது திருமுகம் எப்படியிருந்ததாம்! எப்போதும் சித்திரத்தில் அலர்ந்த செந்தாமரை போன்றிருக்கும் 'சிரித்தபங்கயத்தை! ஒத்த இராமன் முகம், அப்போது, அலர்ந்த செந்தாமரையை வென்றுவிட்டதாம்.

"இப்பொழுது எம்ம னோரால் இயம்புதற் கெளிதே? யாரும்
செப்பருங் குணத்து இராமன் திருமுகச் செவ்வி நோக்கில்
ஒப்பதே முன்பு பின்பவ் வாசகம் உரைக் கேட்ட
அப்பொழு தலர்ந்த செந்தா மரையினை வென்ற தம்மா!

(2. 3. 112)

என்பார் கம்பர். இந்தச் சாந்தம் (சமனிலை) எனும் பண்பை வேறுயார் பெறமுடியும்!

மாற்றுத்தாய் சென்று வனம்போகே என்றிட
ஏற்றுத்தாய் பின்தொடர்ந்து எம்பிரான் என்றழக்
கூற்றுத்தாய் சொல்லக் கொடிய வனம்போன
சீற்றமில்லா தானைப் பாடிப்பற!
சீதை மணாளனைப் பாடிப்பற! என்பார் பெரியாழ்வார்.

"தெவ் மடங்கிய சேண்நிலம்—கேகயர்
தம் மடந்தை—'உன்தம்பியது ஆம்' என
மும் மடங்கு பொலிந்த' முகத்தைப்

பிராட்டியும் அசோக வனத்தில் எண்ணியிருந்தாளாம். மும்மடங்கு பொலிவானேன்! தாய்தந்தை ஏவலின் படி நடக்க ஒரு வாய்ப்புக் கிடைத்தது என்று ஒரு மடங்கும் படியில் குணத்துப் பரதனும் தம்பிக்கே தன் திரு சேரப் போகிறது என்றதால் இரண்டாவது மடங்கும், பகைவரைக் கடக்க, வனவாசம் வாய்ப்பாகும் என்பதால் மூன்றும் மடங்கும் பொலிந்ததாம். 'சிறந்த தம்பி' என்று பரதனைப் பற்றி உயர்வாகப்பேசி, 'பங்கமில் குணத்து எம்பி பரதனே துங்கமாமுடி சூடுகின்றான்' என்று தாயிடம் கூறி இராமன் தன் தம்பி பரதனிடம் வைத்த பாசத்தையும், மதிப்பையும் காட்டுகிறான். இளையபெருமாள் பர்ணசாலை இயற்றித் தந்தபோது 'எங்கு கற்றனை நீ இதுபோல்!' என்று பாராட்டுரைக் கூறித் தாமரைக்கண் பனிசோரத் தழுதழுக் கிறான்.

பரதனோ 'எந்தையும், யாயும், எம்பிரானும், எம்முனும் அந்தமில் பெருங்குணத்து இராமன்' என்ற இராம பக்தி யில் தலைநின்றவன். காட்டுக்கு, அண்ணனுக்குப் பணி செய்யத் தொடர்ந்து சென்ற இலக்குவன்தான் சகோதர அன்புக்கு எடுத்துக்காட்டு என்பதில்லை. அண்ணனைப்

பிரிந்து அருந்தவமிருந்த பரதனும் உத்தம சகோதரனே! எல்லாத் தம்பியும் பரதன் மாதிரித் திகழமுடியுமா—என்பான் இராமன்.

"அத்தா! இதுகேள்என. ஆரியன் கூறுவான், இப்
பித்தாய விலங்கின் ஒழுக்கினைப் பேசல் ஆமோ?
எத்தாயர் வயிற்றிலும் பின்பிறந்தர்கள் எல்லாம்
ஒத்தால் பரதன் பெரிது உத்தமன் ஆதலுண்டோ?" (4.)

எல்லாத்தம்பியும் உன்னைப்போல் இருக்கமுடியுமா—என்று நேரில் உள்ள இலக்குவனைப் புகழாமல் பரதனை இராமன் சிறப்பித்தது ஏன்? கூட வந்து தொண்டாற்றும் நீதான் சிறந்தவன் என்பதில்லை. பிரிந்திருந்து அந்தத் துயரில் துடிப்பவனும் அன்பனே- என்று காட்டவோ! பரதனின் சகோதர பாசம் தாய்ப்பாசத்தை வென்றுவிட்டது. 'தாயீர் அல்லீர்!' என்று கைகேயியைத் துறந்து 'பேயீரே நீர்!' என்று ஏசுமளவு அவனிடம் இராமபக்தியும் கைகேயியிடம் வெறுப்பும் இருக்கிறது. தன்னைப் பழித்து நொந்து கொள்கிறான்-' மூவுலகும் ஈன்றானை முன் ஈன்றானைப்பெற்ற 'கோசலை அந்தச் செல்வத்தை 'யான் பிறத்தலால் துறந்திருக்கிறாள்' என்றும் வேதனைப்படுகிறான். தாயைக் குகனிடம் அறிமுகப் படுத்தும் போது,

"படர் எல்லாம் படைத்தாளைப் பழிவளர்க்கும்
செவிலியைத் தன்பாழ்த்த பாவிக்
குடரிலே நெடுங்காலம் கிடந்தேற்கும்
உயிர்ப்பாரம் குறைந்து தேய,
உடர் எலாம் உயிரிலா எனத் தோன்றும்
உலகத்தே, ஒருத்தி அன்றே
இடர் இலா முகத்தாளை அறிந்திலையேல்
இந்நின்றாள் என்னை ஈன்றாள்"

-என்று தாயைப் பழித்துரைக்கிறான்.

இப்படித் தாயைப் பழிப்பதால் பரதனை யாரும் குறை வாக எண்ணவில்லை. சகோதரபாசமே அவனை இவ்வாறு தாயையும் திட்டச் செய்கிறது என்று புரிகிறது. பதினான்கு ஆண்டுகள் நந்திக் கிராமத்தில் வேதனைத் தீயில் வெந்து, தன்னை நொந்துகொண்டிருக்கும் பரதன், இராமன் குறித்த நாளில் வரவில்லை என்றதும் தீயில் விழவும் முந்துகிறானே! இத்தகைய தம்பி உலக இலக்கியம் எதிலாவது காண முடியுமா?

இலக்குவனும், தம்பி என்ற நிலையிலும் தொண்டன் என்னும் நிலையிலும் மிகச்சிறந்து விளங்குகிறான். "நீர் இருந்தால்தான் மீனும் நிலப்பூவும் இருக்கும். நீயிருந்தால் தான் நானும் சீதையும் இருப்போம் என்று பேசும் இலக்குவன், நீரைவிட்டுப் பிரிந்தால் மீன் வாழாது; நானும் உன்னைப் பிரிந்து வாழேன்" என்று குறிப்பிடுகிறான். நீலப்பூ அனையவள் சீதை. தண்ணீர் குறையக் குறையத் தான் வாடியிருந்து, சேற்றினடியில் கிழங்கு ஊன்றிப் பின் மழை பொழிந்ததும் தளிர்த்துவிடும் நீலப்பூ (குவளை) சீதை. உன்னைப் பிரிந்தபின்னும் (அவதாரரகசியத்திற்காக) வாடியிருந்து, உன் அருள் மழை பெற்றுத் திரும்ப வாழ்வாள் என்பது உட்கிடக்கை. 'பயிலும் காலம் பதி தொடு நாலும்' இலக்குவன், இராமனுக்குத் தம்பியாக மட்டுமன்று; தொண்டனாகத் தோழனாக, நல்லமைச்சனாக எல்லாமாய் இருந்து உதவி யிருக்கிறான். இராமன் அயோத்திக்குத் திரும்பி வரும் போது இலக்குவனும், பரதனும் ஒருவரையொருவர் தழுவிக்கொண்டனர்.

"காடுஉறைந்து உலைந்த மெய்யோ கையறு கவலைகூர
நாடு மறைந்து உலைந்த மெய்யோ—நைந்தது" —என

உலகம் நைந்ததாம். பிரிந்தவேதனையில், பரதன் உடல் மெலிய, உடனிருந்து உண்ணாது உறங்காது உதவிப்

போரிட்டு இலக்குவன் உடல் மெலிய, இருவர் மெலிவை யும் கண்டு, இருவரின் அன்பின் உயர்வையும் உலகம் கண்டு உருகிற்று என்பார் கம்பர்.

இளையவன் சத்துருக்கனனே பேசாத தம்பி. சொல் மாண்புடைய சுமித்திரை பெற்ற மகன்! அன்னையைப் போலவே பேசும் பேச்சில் மாட்சிமை தோன்றப் பேசுபவன் இவனது அன்பையும் பண்பையும் இவன்பேச்சு ஒன்று கொண்டே புரிந்து கொள்ளலாமே! இராமன் பரதனுக்கு வாக்குத்தந்தபடி பதினான்காவது ஆண்டு முடிந்ததும் வந்து சேரவில்லையே என்று துடித்தான் பரதன். "என்னை அரசியல் இச்சையன்" என்று எண்ணினானோ? என்று கதறினான், மூவர்க்கும் பின் உளானான சத்துருக்கனனை அழைத்தான்.

"சொன்ன நாளில் இராகவன் தோன்றிலன்
மின்னு தீயிடை யான்இனி வீடுவன்
மன்னன் ஆதி; என் சொல்லை மறுது." (6—37—218.)

என்று பேசவும், தன்காதுகளைப் பொத்திக்கொண்டு, நஞ்சுண்டவன் போல மயங்கி, நாட்டமும், மனமும் நடுங்க, 'நான் உனக்கு என்னதவறு செய்தேன்?' என்று அரற்றினான். பின்னர் அவனுக்கு நியாயமான கோபமும் வந்தது. "தசரதனின் நான்கு பிள்ளைகளில் மூத்தவன் இராமன்; பண்பிற்சிறந்து, தாய்தந்தை ஏவல் கேட்டுக் கானகம் சென்றான். அவனைக்காத்துப் பின்னே சென்றான் ஒருதம்பி, அவர்கள் வரும் நாள் கடந்ததே என்று உயிர் விடநிற்கும் நீயும் ஒருதம்பி. நான்மட்டும் நாணமின்றி நாடாள் வேனோ? இந்த அரசாட்சியில் அப்படி என்ன இனிமை இருக்கிறது?"

"கான் ஆள நிலமகளைக் கைவிட்டுப்
போனானைக் காத்துப் பின்பு
போனாலும் ஒருதம்பி; போனவன்தான்
வரும்அவதி போயிற்று என்னா
ஆனாத உயிர்விடஎன் றமைந்தானும்
ஒருதம்பி அயலே நாணாது
யானும்இவ் வரசாள்வெ? என்னே இவ்
வரசாட்சி! இனிதே அம்மா! (6—37—221)

என்று பேசும் பேச்சில் இவனுடைய அருமைக் குணமும் புலனாகிறது. தம்பியர் என்றால் இராமனின் தம்பியர் போல வாழவேண்டும் என்று நாடு போற்றுகிறது.

இப்படி உடன்பிறந்தார் தான் பாசத்துடன் திகழ முடியுமா? இல்லை! எங்கோ பிறந்து, எங்கோ வளர்ந்து வருபவரும் உணர்ச்சியால் ஒத்த கிழமை கொண்டு, சகோதரர் ஆகமுடியும் என்கிறது இராம காதை. இந்த அன்புள்ளத்தை இராமனுக்கு முன்பே அவன் தந்தை தசரதன் காட்டியுள்ளான். சம்பாசுர யுத்த காலத்தில் கழுகின்வேந்தன் சடாயுவைத் தன் உயிரனைய நண்பனாய், என் சகோதரனாக ஏற்றுள்ளான் தசரதன் இதைச் சடாயுவே, வனத்தில் இராமனிடம் கூறுகிறான்.

"தயிருடைக்கும மத்துஎன்ன உலகைநலி சம்பாணைத்
தடிந்த அந்நாள்
அயிர் கிடக்கும் கடல்வலயத் தவர் அறிய
"நீ உடல், நான் ஆவி,"

என்று கூறினானும். "அப்படிப்பட்ட தசரதனைக்கூற்றுவன் எடுத்துச் சென்றானா? அவன் தன்னை வெறும் உடல் என்று

சொல்லி, என்னைத் தானே உயிர் என்றான். இராமன் உயிரைத்தானே கவர வேண்டும்! உடலை ஏன் எடுத்துச் சென்றான் அவன் அறிவற்றவன்தானே'' என்பது சடாயு வின் புலம்பல். அந்த அளவு சடாயுவின்மீது தசரதன் பாசம் கொண்டிருந்தான் என்பது தெரிகிறது. அதனால் தான் சடாயு அவனுயிருடன் தன் உயிரைச் சேர்த்துவிடத் துணிகிறான். பின், இராம இலக்குவருக்கு ஆறுதல் தருவதற் காக உடலிருந்து உதவுவதற்காக உயிர் வாழ்கிறான். மரு மகள் சீதை என்று அன்புகாட்டி, அவளைத் தசமுகன் சிறை யெடுத்துச் செல்லும் போது எதிர்த்துப் போரிட்டு, உயிர் துறக்கிறான், தந்தையனைய அவனுக்கு, பெரிய தந்தை முறையில் நின்ற சடாயுவுக்கு இராமன் இறுதிச் சடங்கு கள் செய்கிறான். தந்தையாக வந்த தசரதனுக்குத்தான் செய்யாத, செய்ய இயலாமற் போன ஈமக்கடன்களைத் தன் 'பெரிய தந்தை' சடாயுவுக்குச் செய்து வைகுந்தத் தேற்றுகிறான். இத்தகைய பரந்த அன்பு தந்தை வழிச் சொத்தாக இராமனிடமும் சேர்ந்து விடுகிறது.

வசிட்டனிடம் கற்ற கல்வி இந்த அன்பை, இரக்கத்தை இராமனிடம் வளர்த்துள்ளது. தன் எதிரே வரும் மக்களைக் காண்பதில் இராமன் முகத்தில் எத்தனை மலர்ச்சி! அவன் பேச்சில் எத்துணைக் கனிவு! எத்துணைப் பரிவு.

''நான் உங்களுக்கு என்ன செய்யவேண்டும்? உங்களுக்கு இடர் ஒன்றுமில்லையே! உங்கள் மனையில் அனைவரும் நலமா? உங்கள் மைந்தர் மதியுடனும், வலியுடனும் வாழ்கின்றனரா?'' என்றெல்லாம் வினவுகிறான்.

*'' எதிர்வரும் அவர்களை, எமையுடை இறையவன்*
*முதிர்தரு கருணையின் முகமலர் ஒளிரா*
*எதுவினை? இடரிலை? இனிதுநும் மனையும்?*
*மதிதரு குமரரும் வலியர்கொல் எனவே!...* (1. 5. 132)

கேட்கிறான் என்கிறார் கம்பர். யாரென்று கருதாமல், இன்னார் இனியார் என்று பகுக்காமல் அனைவரிடமும் அன்பு காட்டுகிறான் இராமன்.

அன்புள்ளம் தானே அன்புள்ளத்தைப் புரிந்து கொள்ள முடியும். தேனையும் மீனையும் கொண்டுவந்து தாய் எனப் பரிவு காட்டியவன் குகன். இராமனைப் பிரிய மனமின்றித் துடித்து 'மலரடி பிரியேனால்' என்று பேசியவன் ஆவ்வேடன் இங்கேயே தங்கிவிடு இராமா. கான்உள இங்கே. கன்னி விளையாட அன்னமுள. நான் உளேன் உனக்கு அடிமை செய்ய" என்று வேண்டியவன் குகன். அவனது அன்பின் தன்மை மலைபோல் உயர்ந்தது. கடலினும் ஆழ்ந்தது என்று கண்ட காகுத்தன்,

> என்உயிர் அனையாய்நீ; இளவல் உன் இளையான் இந்
> நன்னுத லவள் நின்கேள்; நளிர்கடல் நிலமெல்லாம்
> உன்னுடையது; நான் உன் தொழில் உரிமையில்
> உள்ளேன்' (2. 7. 42.)

என்று உறவு சொல்கிறான்; கொள்கிறான். அரசியலுறவில் 'அண்ணன்' 'தம்பி' என்று ஆயிரம்பேர் பேசிக் கொள்ள லாம். ஆனால் அவை குடும்ப உறவாக வகித்தவன் தசரதன் மைந்தன்.

"என்கிளை உனது; உன் காதல் சுற்றம் எனது' என்ற உறவு பரந்து, விரிந்த, ஆழ்ந்த உறவல்லவா! 'தசரதனின் நான்கு பிள்ளைகள், நாங்கள், உன்னைச் சேர்த்து ஐவர் ஆனோம்.

> "முன்புளேம் ஒரு நால்வேம்; முடிவுள தெனஉன்னு
> அன்புள இனி நாம் ஓர் ஐவர்கள் உளரானோம்"
> (2. 7. 43)

உன் சுற்றம் எனதல்லவா! அதை நீ இனிது ஆண்டு இரு என்று விடைதந்து, பதினான்காவது ஆண்டு முடிந்து நகர் திரும்பும் போது உனைக் காண்பேன் என்ற வாக்கும் தருகிறான். உதவி செய்யும் நேரத்தில் பேசப்படும் உபசார மொழியன்று என்பதனை உறுதிப்படுத்தவே மீண்டும் பரத்துவாச முனிவரது இருக்கையில் குகனைச் சந்திக்க வைக்கிறார் கம்பர். இராமன் குகனைத் 'தம்பி' என்று தழுவுகிறான். 'தாயினும் உயிர்க்கு நல்லான்.' என்று இராமன் அறிமுகப் படுத்துகிறான். பதினான்கு ஆண்டு களுக்கு முன் இலக்குவன் தாயின் நல்லான்' என்று குகனை இராமனுக்கு அறிமுகம் செய்த தொடரைக்கூட மறவாமல் எடுத்தாள்கிறார் கம்பர்.

கங்கைக் கரையில் எளிய வேடன் குகனை அன்புத் தம்பி என ஏற்ற பண்பு யார் யாரையெல்லாம் கவர்ந் திருக்கிறது!

"ஆழநீர்க் கங்கை அம்பி காடவிய
ஏழை வேடனுக்கு 'எம்பிநின் தம்பி; நீ
தோழன்; மங்கை கொழுந்தி' எனச்சொன்ன
வாழி நண்பனை உன்னி மயங்குவாள்" (5. 3. 23)

அசோக வனத்திருந்த பிராட்டியின் எண்ணம் இது.

வேடர் (கள்ளர்) குலத் தலைவரான திருமங்கை மன்னரோ,

ஏழை ஏதலன் கீழ்மகன் என்னாதிரங்கி
மற்றவர்க்கு இன்னருள் சுரந்து
மாழை மாமட நோக்கி உன் தோழி
உம்பி எம்பி

என்று உகந்துமொழிந்த இராமனின் பண்பை எண்ணித் தான் அவனடி அடைந்தராம். இப்படி எளிய வேடனைச்

சக்கரவர்த்தித் திருக்குமாரன் தம்பியாக்கிக் கொண்டபின், கிட்கிந்தையில் 'குன்று சூழ்வான் (சூரியன்) மகன் சுக்கிரீவனை ஏற்றுக்கொள்கிறான். அண்ணன் வாலிக்கு அஞ்சிய சுக்கிரீவன் இராமன் பாதத்தில் சரணடைகிறான் "இதற்குமுன் உனக்குற்ற இன்பதுன்பங்கள் போக, இனி வருவன எனக்கும் உனக்கும் சரிபாதி. வானிலோ, மண்ணிலோ உன்பகைவர் என்பகைவர். உன் நண்பர் எனக்கும் நண்பர் உன்கிளை எனது, என் காதற்சுற்றம் உனது. "என் உயிர்த்துணைவன் நீ" என்று தசரதன் குடும்பத்தில் அவனையும் சேர்த்து விடுகிறான். தவறு செய்த சுக்கிரீவனை, கார்காலம் முடிந்தும் வானரப் படையுடன் சீதையைத் தேடவராத சுக்கிரீவனை மன்னித்ததுடன் 'பரதன் அனையவன்' என்று புகழவும் செய்கிறான் இராமன். 'குற்றம் பார்க்கில் சுற்றம் இல்லை' என்றுணர்ந்து இவ்வாறு அன்புகாட்டினானே!

குரங்கினத்துத் தலைவனும் சுக்கிரீவனைத் தசரதனின் ஆறாவது பிள்ளை ஆக்கிய இராமன், பஞ்செனச் சிவக்கும் மென்கால் தேவியைப் பிரித்த பாவியின் தம்பி வீடணனை யும் தம்பியாக்கிக் கொண்டு தசரதனை ஏழு பிள்ளைகளால் பொலியச் செய்கிறான்.

•

'குகனொடும் ஐவரானேம் முன்பு; பின் குன்று சூழ்வான்
மகனொடும் அறுவர் ஆனேம்; எம்முழை அன்பின். வந்த
அகமர் காதல் ஐய! நின்னொடும் எழுவர் ஆனேம்;
புகலரும் கானம் தந்து புதல்வரால் பொலிந்தான் நுந்தை'
(6—4—143)

என்தந்தை தசரதன் என்னாது 'உன் தந்தை என்று அவனிடம் இந்த உறவின் இறுக்கத்தை உணர்த்தி விட்ட அன்புதான் என்னே! அறிவின்திறம் தான் என்னே!

## கம்பன் காவியம் காட்டும் பாடம்

ஒருமைப்பாடு, உலக சகோதரத்துவம், ஆன்மநேயம் என்றெல்லாம் உலகில்அறிவாளர்கள், அருளாளர்கள், தலைவர்கள் கூறும் ஒன்றை இராமன் தன் வாழ்வின் 'அன்பு வழி' என்பதால் காட்டிநிற்கிறான். ஜாதிமத பேதமற்ற சாம்ராஜ்யம் உலகின் இன்றையத்தேவை. வேடனை, குரங்கை, அரக்கனைத் தம்பியராகஏற்றஇராமன், கழுகினத் தரசனை அண்ணனாய் ஏற்ற தசரதன் இவர்கள் நமக்குணர்த்தும் பாடம் இதுவே! அன்பு ஒன்றே உலகை ஒரு குலமாக்க வல்லது. அன்பு ஒருவழிப் பாதை யன்று. இருபாலும் பெருகிச் சங்கமமாகவேண்டும் அன்பு உலகை ஆளவல்லது. ஹிட்லரின் அதிகாரம் சகிக்க முடியாததை இயேசு பெருமானின் அன்பு சாதித்திருக்கிறது. ஆங்கிலப்படைபலம் சாதிக்க முடியாததை மகாத்மாவின் அன்புநெறி சாதித்துள்ளது. அரசியல் சட்டங்கள் நிமிர்த்த முடியாத மனக்கோணல்களை ஆன்மிக உலகம் நிமிர்த்த இயலும். ஆன்மநேயம் இராமகாதை வழி அறிவுரையாகி உலகில் நின்று நிலவும். அண்டை நாடுகளை அன்பால் இணைத்துக்கொண்டால் போர் ஒடுங்கும். கங்கைக்கரை அரசன் குகனும் இராமனின் அன்பால் உறவானான். குரங்கினத் தரசன் சுக்கிரீவனும் வானரப் படையுடன் உதவினான் அரக்கன் தம்பியும் அண்ணனைவிட்டு, இராமனையே அண்ணனாக ஏற்று, இராமனின் வெற்றிக்கு உதவினான். அன்புக்குடும்பம் பண்புக்குடும்பம் வெற்றி பெற்ற கதையே இராமாவதாரம்.

ஒருமைப்பாட்டுணர்வு இருந்தால் எந்தப்பகையையும் ஒடுக்க முடியும், வெற்றி காண முடியும். சிறுசிறுமாகாணங்களாக நமது பாரதம் பிளவு பட்டிருந்தபோது அன்னியர் மிக எளிதில் நம்மிடையே புகுந்தனர். பிரித்தாலும் சூழ்ச்சியால் நம்மவரையே நமக்குப் பகையாக்கி நம்மை அடிமைப்படுத்தினர். அதனால்தான் ஒருமைப்பாட்டின்

அவசியத்தை உணர்ந்த சர்தார் வல்லபாய்ப் படேல் போன்ற செயல் வீரர்கள் "சேதமில்லாத" இந்தியாவை உருவாக்க முனைந்தனர் பாரதியும்,

"சேதமில்லாத இந்துஸ்தான் – இதைத்
தெய்வமென்று கும்பிடடி பாப்பா"

என்றார். நாட்டுக்குள் மாகாணங்களின் பிரிவு, உலகுக்குள் நாடுகளின் பிரிவு இவை உலக சமாதானத்திற்கு ஊறு விளை விக்கும் என்றேதான் உலக அமைதிக்காக உலகநாடுகளின் பொது நிலையமான ஐக்கிய நாட்டு நிறுவனம் பணிபுரிகிறது.

ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு – நம்மில் ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வு – என்றறிந்த பின்னும் நம் நாட்டில் இன்னும் 'மண்ணின் மைந்தர்கள்' (Sons of the soil) கொள்கை நீடிக்கலாமா? மாகாணங்களுக்குள் சண்டை தேவையா

'கங்கை நதிப்புறத்து கோதுமை பண்டம்
காவிரி வெற்றிலைக்கு மாறு கொள்வோம்'

என்ற கவிஞனின் கனவு கனவாகவே இருக்கலாமா? காந்தி யடிகள் கனவு கண்ட 'இராமராஜ்யம்' மலர்ந்துவிட்டால் சக்கரவர்த்தித் திருக்குமாரனும் வேட்டுவக் குகனும் சகோ தரர்கள் ஆக முடியுமே! கம்பனின் காட்சியின் மாட்சி இதுவே!

# 6 அடைக்கலம் காத்தல்

தன்னிடம் வந்து அடைக்கலம் புகுந்த புறுவைக் காக்கத் தன்னுடலை அரிந்து தந்து, தானே துலையில் (தராசில்) ஏறினன் சிபிசக்கரவர்த்தி என்பது பழந்தமிழ் இலக்கியங்கள் கூறும் செய்தி,

'தன்னகம் புக்க குறுநடைப் புறவன்
தபுதி அஞ்சிச் சீரை புக்கோன்' எனவும்
புள்ளுறு புண்கண் தீர்த்ததோன்'

எனவும் அவனைப் புகழ்வர். அடைக்கலம் காத்தல் மாபெரும் தருமமாகும், 'இராமாயணம் சரணாகதி சாஸ்திரம்' என்பதன் உட்பொருள், 'அடைக்கலம் காத்தல்' என்ற பேரறத்தை நிலைநாட்ட வந்துள்ளான் இராமன் என்பதை வலியுறுத்தலே.

'சரண்உனைப் புகுந்தேன், என்னைத்தாங்குதல் தர்மம்' என்று காலில் விழுந்த சுக்ரீவனுக்கு அடைக்கலம் தருகிறான் இராமன். மாயாவியுடன் போரிட்டு, பிலத்துள் சென்ற வாலியைக் காணாமையும், பிலவாசலில் இரத்தத்துளிகள் தெறித்தமையும், வாலி மாண்டான்' என்று கருதவைக் கின்றன. மற்ற வானரங்கள் வலியுறுத்தவே சுக்கிரீவன் அரசனாகிறான். வாலி மீண்டும் வந்து பார்த்துத் தம்பியைத் தவறாக எடைப்போட்டுக் கொல்லவும் துணிகிறான். தப்பி ஓடி, இரலையங்குன்றில் ஒளிந்து வாழ்ந்த சுக்கிரீவனைக் காக்கும் கடமையைத் தனதாகக் கொள்கிறான் அனுமன்.

சீதையைத் தேடிவரும் இராமனையும், இலக்குவனையும் கண்டு 'இவர்களே தரும மூர்த்திகள்' என்று தெளிகிறான். தான் உணர்ந்த அதனைத் தலைவன் சுக்கிரீவனுக்கும்

உணர்த்துகிறன். இராம இலக்குவரைக் கண்டு, நோக்கி, 'வேறுள குழுவையெல்லாம் மானுடம் வெல்ல, விண்ணிலிருந்த பரந்தாமன், மண்ணில் கால் தரைதோய வந்த, வடிவம் காகுத்த வேடம் என்று தேறி, இராமனின் காலில் விழுந்து அடைக்கலமாகிறுன் அவனைச் சரணுகத வத்சலனை இராமன், நண்பனுகவும், தம்பியாகவும் ஏற்று மகிழ்கிறுன்.

*" மற்றினி உரைப்ப தென்னே வானிடை மண்ணில்*
*நின்னைச்*
*செற்றவர் என்னைச் செற்றூர் தீயரே எனினும் உன்னேடு*
*உற்றவர் எனக்கும் உற்றூர்; உன்கிளை எனது என்காதல்*
*சுற்றம்உன் சுற்றம் நீஎன் இன்னுயிர்த் துணைவன்*
*என்றுன்"* (4. 3. 27.)

உயிர்நட்பு இப்படித்தான் அமையவேண்டும் என்று இலக்கணம் வகுக்கிறுன் காகுத்தன். சரண் என்று வந்தவனுக்குத் தலைமை, தாரம் இரண்டையும் தர உறுதி கொள்கிறுன்.

*" உலகம் ஏழினேடு ஏழும்வந்து அவன் உயிர்க்கு உதவி*
*விலகும் எனினும், வில்லிடை வாளியின் வீட்டி*
*தலைமையொடு நின்தாரமும் உனக்கின்று தருவென்"*
(4. 3 70.)

என்ற சொற்களில்தான் எவ்வளவு உறுதி! 'உலகமே எதிர்த்து நின்றுலும் உனக்கு உதவி செய்வேன் என்று கொடுத்த வாக்கிற்கேற்ப வாலி வதை நடக்கிறது. சுக்கிரீவன் உயிர்காக்க வாலிவதை மிக இன்றியமையாததாகிறது.

வீடணன் அடைக்கலம் :

வீடணன், அண்ணன் இராவணனுக்கு அறிவுரைகளைப் பலவழியில் எடுத்துரைக்கிறுன். அவனுக்கு மானுடரால்

மரணம் நேரக்கூடும். ஏனெனில் அவன் எக்கோடியாராலும் வெல்லப்படாய் என்ற வரம்தான் கேட்டுப் பெற்றான். கொல்லப்படாய் என்று வரம் பெறவில்லை. மானுடரால் தன்னை ஒன்றும் செய்ய இயலாது என்று அலட்சியப்படுத்தினால், மானுடர் தன்னைக் கொல்லாதிருக்க வரம் கேட்டுப் பெற்றானில்லை. பெண் ஒருத்தியால் அவனுக்கு அழிவும் குரங்குப்படையால் அவனுக்குத் தோல்வியும் வரும். விரும்பாத பெண்ணைத் தொடமுற்பட்டால் அவன் தலை பத்தும் சிதறும் என்பதெல்லாம் வீடணன், இராவணனுக்குக் கூறிய எச்சரிக்கைகள் அனைத்தையும் புறக்கணித்த தசமுகன் இவனை அதட்டி, விரட்டி 'விழிஎதிர் நிற்றியேல் விளிதி' என்று கொல்லவும் துணிந்தான், அறத்திற்கு மாறாகச் செல்பவனைத் துறந்து வீடணன் அறத்தின் மூர்த்தியிடம் சரணடைய வருகிறான்.

## இராமன் நண்பர்களோடு ஆராய்தல்

தன்னை அடைக்கலம் வேண்டி வந்துள்ள வீடணனை ஏற்கலாமா கூடாதா என்று எல்லோரையும் கேட்கிறான் இராமன். சுக்கிரீவன்தான் முதலில் விடை தருகிறான் :

"தம்முனைத் துறந்தது தரும நீதியோ
  செம்மையில் அரக்கரில் யாவர் சீரியர்?
அண்ணனுக்குப் 'போர்க்கு உறவன்றியே போந்தபோது
  இவன் ஆர்க்கு உறவு ஆகுவன்?'

—என்று கேட்பன நமக்குச் சிரிப்பை வரவழைக்கிறது, இதைச் சுக்கிரீவன் சொல்லலாமா!

'அரக்கரை ஆசு அறக்கொன்று, நல்லறம்
  பரக்க வந்தனம்' எனும் பெருமை பூண்டநாம்
இரக்கமில் அவரையே துணைக்கொண்டு ஏற்றுமேல்
  'சுருக்கம்உண் டவர்வலிக்கு என்று தோன்றுமால்'

(6—4—66)

நமக்கு வலிமையில்லை என்று தோன்றும்படி அவர்களையே துணை சேர்த்துக் கொள்ளலாமா? இவன் வஞ்சனை இயற்றத்தான் வருவான். 'தஞ்சு' என வந்தானல்லன்–என்றெல்லாம் விளம்புகிறான். சாம்பனோ, வஞ்சனைமானின் வரவு போன்றது வீடணன் வரவு என்கிறான். நீலன் இவனைத்தெரிந்து தேறவேண்டும் என்று சொல்கிறான்.

## அனுமனின் பேச்சு

இவனை நான் 'தீயவன்' என்று கருதவில்லை. ஒருவன் அகத்துள கருத்து முகத்தில் தெரியும். இவனிடம் வஞ்சகத்தை நான் காணவில்லை. 'இவன் வரவு நல்வரவே!' என்று அனுமன் முடிக்கிறான்.

## இராமனின் கருத்து

"மாருதி வடித்துச் சொன்ன பெற்றியே பெற்றி! வெற்றி கிடைக்கட்டும் அல்லது தோற்கட்டும், நான் அழிந்து போனாலும் வாழ்ந்தாலும் சரி; அடைக்கலம் வந்தவனைக் கைவிடேன் என்று அடைக்கலப் பொருளைக் கைவிடாது காப்பதன் பெருமையைப் பலபட விரித்துரைக்கிறான் இராமன்.

'உடைந்தவர்க்கு உதவான் ஆயின், உள்ளது ஒன்று ஈயான் ஆயின்
அடைந்தவர்க்கு அருளான் ஆயின், அறம்என்ஆம்? ஆண்மை என்னாம்'
(6—4—108)

ஆண்புறு ஒன்று தன் பெட்டையைக் கொன்று வந்த பின், தன்னையும் பிடிக்க முனைந்த வேடனுக்குக் குளிர்காயத் தீயில் விறகுக் குச்சிகளை இட்டு உதவி, அவன் பசிபோக்கத் தன்னையும் அந்தத் தீயில் வீழ்த்தியதே! அந்தப்புறு அவ்வேடனைத் தன்னிடம் வந்த அடைக்கலம் என்றல்லவா காத்தது!

'ஆதிமூலமே! என்றழைத்த கஜேந்திரனின் குரலுக்கு ஓடிவந்து உதவிய நாரணன் பெருமை மறக்கற்பாலதோ? மார்க்கண்டேயன் சிவபெருமானைத் 'தஞ்சம்' என்று அடைந்ததால் கூற்றுவனைக்கூட அந்த நீலமணி மிடற்ற அண்ணல் உதைத்து வீழ்த்தவில்லையா!

என் சீதையைக் காக்க சடாயு உயிர்தரவில்லையா!

"சரண் எனக்கு யார்கொல் என்று சானகி அழுதுசாம்ப
அரண் உனக்கு ஆவன், வஞ்சி அஞ்சல் என்றருளின் எய்தி
முரணுடைக் கொடியோன்கொல்ல, மொய்யமர் முடித்துத் தெய்வ
மரணம்என் தாதை பெற்றது என்வயின் வழக்கன் றோமோ?
(6—4—113)

'உன்னிடம் அபயம்' என்றுஓடிவந்து சேர்ந்தவன் உயிரைத் தன் உயிரைவிடச் சிறப்பாகக் காக்கவேண்டும். அப்படி ஓம்பாத கயவன் நரகில் வீழ்வான்

சீதைக்காக மட்டுமா இந்தப் போர் தொடங்கினேன்! முனிவர்களுக்கு அன்று அபயம் தந்த உரைக்காக்கவும்தானே

'சீதையைக் குறித்த தேயோ! "தேவரைத் தீமை செய்த
பேதையைக் கொல்வேன்" என்று பேணிய விரதப் பெற்றி?
வேதியர் 'அபயம்' என்றார்க்கு அன்றுநான் விரித்துச்சொன்ன
காதையைக் குறித்து நின்ற அவ்வுரை கடக்கல் ஆமோ!
(—4—151)

'ஆதலால் 'அபயம்" என்ற பொழ்தத்தே அபயதானம் ஈதலே கடப்பா டென்பது; இயம்பினீர் என்பால் வைத்த காதலால்;'' (6. 4. 117.)

''என் மீதுள்ள அன்பினால்தான் எதிரியின் தம்பியைச் சேர்த்துக் கொள்ளலாகாது" என்று கூறியிருக்கிறீர்கள். அப்படித்தானே! என்று பேசும் நயத்தக்க நாகரிகத்தை இராமனிடம் கண்டு மகிழ்கிறோம். ஆகவே, அடைக்கலம்

வந்தவனைக் கைவிடாதுஏற்று அன்பும் அருளும் காட்டுவது அரசருக்கு, ஏன், ஒவ்வொருவருக்கும் இன்றியமையாத பண்பாகிறது.

## காப்பது கடன்

அடைக்கலம் தருவது பெரிதன்று; அடைக்கலமென வந்தவனைக் காப்பது தலையாய கடமையாகும் என்பதையும் கம்பன் அழகுறக் காட்டுகிறான். மகுடபங்கப் படலத்தில் இலங்கையின் மாட்சியைக்கண்டு இராமனும் மற்றவர்களும் நின்று கொண்டிருக்கும் போது, இராவணன் வானர சேனையைப், பார்க்கக் கோபுரத்தின்மீது ஏறுகிறான் அவனைக் கண்டதும் வீடணன், "தன் குலத்தையும், சுற்றத்தையும் நரகத்திற்கு அனுப்பும் இழிவானசெயலை மேற்கொண்டுள்ள இராவணனிவன்" என்று காட்டுகிறான். இதைக் கேட்டதும் சுக்கிரீவன் ஒரே பாய்ச்சலில் இராவணன் மீது பாய்ந்து விடுகிறான்.

சுக்கிரீவனைக் காணாத இராமன் புலம்புகிறான். "வாராய் ஆகில் உய்வெனே?" என்றுதவிக்கிறான். காரணம்தன்னிடம் அடைக்கலம் வந்த சுக்கிரீவனைக் காத்தல் தன் தலையாய கடன் என்பதுதான். இந்தநேரத்தில் இராவணனின் முடி மணியைப் பறித்துக் கொண்டு திரும்பி வந்து சேர்கிறான், சூரியன் புதல்வன். இராமன் அவனைத் தழுவி ஆனந்தக் கண்ணீரால் நீராட்டுகிறான்.

*"இந்நிலை விரைவின் எய்தாது, இத்துணைத் தாழ்த்தி ஆயின்*
*நன்னுதல் சிதையால்என்? ஞாலத்தால் பயன் என்? நம்பி*
*உன்னையான் தொடர்வல்"* என்று பேசுகிறான்.

அடைக்கலப் பொருளைக் காப்பதில் இருக்கும் அக்கறையும் ஆர்வமும் துடிப்பும் புலனாகின்றன.

இதேபோல, இராவணன், போரில், வீடணனை மேல் வேல் எறிகிறான். அதை ஏற்க இலக்குவன் முந்துகிறான். காரணம், வீடணனுக்கு, அடைக்கலம் தந்து விட்டான் இராமன். 'அபயம்' என்று வந்தவனைக் காப்பதில் அண்ணனுக்கு உதவ வேண்டும்; அத்துடன் கும்பகருணன் இறக்குமுன் இராமனிடம் வீடணனின் அடைக்கலத்தை மேலும் உறுதிப்படுத்தியிருக்கிறான். 'தம்பி என்று பார்க்க மாட்டான் தகவில்லாத் தசமுகன். ஆகவே, உம்பியைத் தான், உன்னைத்தான், அனுமனைத்தான் எம்பி பிரியானாக அருளுதி' என்று வேண்டியிருக்கிறானே! ஆதலால் வீடணன் உயிர்காத்தல் இன்றியமையாதது என்று இலக்குவன் வேலை ஏற்கப் பாய்ந்து முன்னேற,

> ''இலக்குவதற்குமுன் வீடணன் புகும் இருவரையும்
> விலக்கி அங்கதன் மேற்செலும்; அவனையும் விலக்கி
> கலக்கும் வானரக் காவலன்; அனுமன்முன் கடுகும்''

என்ற கம்பர், அனைவரையும் தள்ளிக்கொண்டு காற்றினும் விரைந்து சென்று 'அவ்வேலைத் தன் மார்பிடை ஏற்றனன் முதுகிடைப் போக' என்கிறார்.

இன்றும் என்றும்;

அன்று கம்பன் காட்டிய சரணாகதி தத்துவம் பரம் பொருள் ஜீவாத்மா இவர்களுக்கு மட்டுமல்ல எல்லா உயிர் களுக்கும் என்றும் பொதுவானதே. தனிவாழ்விலும் பொது வாழ்விலும் தஞ்சம் என்றவரைக்காத்தல் தலையாய தருமம். நாம் பிறருக்கு அபயமளித்தால் நமக்கு இறைவன் தஞ்சம் தந்து காப்பார். தன் மகனைக் கொன்று விட்டு வந்தவனே தன் வீட்டில் தஞ்சம் புகுந்துள்ளான் என்றறிந் தும் அவனுக்கு அடைக்கலம் தந்துதவிய யூசுப்பின் வரலாறு படித்திருக்கிறோமே!

மேற்கு பாகிஸ்தானியர்களால் துன்புறுத்தப்பட்டு, வீடுவாசல் உற்றார் உறவினரை இழந்து தஞ்சம் என்று நம்மிடம் வந்தடைந்த கிழக்கு பாகிஸ்தான் மக்களுக்கு நம் அரசு உணவு, உடை பொருளுதவி செய்ததுடன் படையுதவியும் செய்து புதிய 'பங்களா தேசம்' உருவாக உதவவில்லையா! 'உதவி' என்று வரும் சிறிய நாடுகளுக்குப் பல வல்லரசுகள் பாதுகாப்புத் தரவில்லையா! தன்னைச் 'சரண்' என்று அடைந்தவனுக்கு உதவும் தன்மை என்றும் மனித சமுதாயத்தில் நிற்கும்; நிலைக்கும்.

# 7. தூதரைக்கோறல்

போர் நிகழுங்கால் பிறநாட்டுத் தூதரகங்கள், தூதுவர்கள், அவர்தம் உடைமைகள் இவற்றை அழிக்கக்கூடாது. பாதுகாக்க வேண்டும். நெறிப்பட்ட யுத்தம் அவ்வாறு தான் நடக்கும்; நடக்க வேண்டும். 'தூது' மிகச் சிறந்தது, இலக்கிய உறுப்புக்களிலும் தூது மிகச் சிறப்புப் பெற்றது. 'கண்' உடம்பில் சிறந்த உறுப்பு. இது சென்று பற்றுவது, அதுபோலத் தூதும் சென்று உணர்த்துவது. கந்தபுராணத்தில் முருகப் பெருமானின் தூதுவராக வீரபாகுத்தேவர் சென்றார். சூரபதுமன், தூதுவந்தவரைக் கொல்லலாகாது என்ற நீதியுணர்ந்து நடந்தான். பாரதத்தில் பஞ்சவரின் தூதனாக வந்த பரந்தாமனைக் கொல்லச் சூழ்ச்சி செய்தான் துரியன். பொய்க்குழி செய்து, அந்த நிலவறையில் பல வீரர்களை நிற்கவைத்து, மேலே இருக்கை அமைத்தான், ஆனால் பரம்பொருள் கண்ணனோ வஞ்சனையை உணர்ந்து கொண்டு பேருருக்கொண்டு அனைவரையும் அச்சுறுத்தினான். இராமகாதையில் அனுமன் தூது சென்றான். தசமுகனிடம் இராமனது பெருமை பலவும் கூறி, 'அவன் தேவியை விடுக' என்று எடுத்துரைத்தான்.

சினம் கொண்ட இராவணன் அனுமனைக் 'கொல்மின்' என உத்தரவிட்டான். உடனே எதிர்க்குரல் ஒன்று 'நில்லுங்கள்' எனத் தடுக்கிறது. அது வீடணனின் குரல். இவ்வளவு துணிவுடன் தடுக்கும் தம்பியின் குரல் கேட்டு இராவணனும் திடுக்கிடுகிறான்.

அறம் தழுவிய பேச்சுக்கு ஆற்றல் உண்டு என்பதும் அறத்தின்பாலுள்ள பற்று எப்படிப்பட்ட சூழலிலும் எப்படிப்பட்டவனிடத்திலும் ஆத்ம சக்தியை எழுப்பிவிடும்

என்பதும் தெரிகிறது. இல்லையென்றால் எல்லாரையும் அடக்கி வைத்திருக்கும் தசமுகன் அவையில் அவனைத்தடுக்க வீடணன் குரல் கொடுக்க முடியுமா? 'தூதரைக் கொல்வது பெரியபாவம்' என்றநீதியை அரசனுக்குஎடுத்துரைக்கிறான்.

*தக்கோய்! இறைவன்நீ! இயம்புதூது வந்தனன்*
*என்ற பின்னும் கோறியோ மறைகள் வல்லோய்!*

பொய்யிலா வேதம் என்ற சட்டம் இயங்கிக் காக்கும் பிரபஞ்சங்கள் எங்கும், வேந்தர், பெண்களைக் கொன்ற செய்தியாவது வந்ததுண்டேதவிர, தூதரைக் கொன்றதாக உண்டா?''

'அரசியலில் தூதுத் தொழிலாற்றுபவரைக் கொல்லும் பழிப்புக்கும் நகைப்புக்கும் இடமான செயலை நீதானா முதன் முதலில் செய்யப் போகிறாய்? —என்ற கேள்வி இராவணனின் சிந்தையில் கொஞ்சம் மாற்றம் ஏற்படுத்தியது. 'நமது தங்கையை அந்த வீரர் மூக்கரிந்து விடவில்லையா! இவன் உயிரை நீ எடுத்தால் இங்கு கண்டவற்றை அவன் அங்குப்போய்ச் சொல்ல இயலாதுபோகுமே வேற்றோர் ஏவ, இத்தலை எய்தினானைக் கொல்லுதல் இழுக்கம்' என்று உறுதியாகச் சொன்னான் வீடணன்.

'கொல்லல் பழுதே' என்று தசமுகனும் உடன்பட்டுப் பேசினான். அரச தர்மம் உணர்ந்தவர்கள் என்றும் உடன்படும் கருத்து இது. இன்று நாடுகள் மோதும்போது பிற நாட்டுத் தூதரகங்களைச் சிறைப்படுத்துவதும், தகர்ப்பதும், தூதிரகத்தில் பணியாற்றுவோரைப் பணயக் கைதிகளாக்குவதும் நடக்கின்றன. இது அரச நீதிக்குப் புறம்பானது. இராவணன் கூடச் செய்யாத, செய்யத்துணியாத ஒரு கொடிய செயலை இன்றைய அரசுகள் செய்யலாமா? இது நாகரிகத்தின், பண்பாட்டின் விளக்கமாகுமா?

'தூதரை எறிதில் என்பது புல்லிது: பழியொடும் புணரும்' என்று அனுமனைக் காக்கக் குரல் கொடுத்த விடணன் போல அறமுரைக்க இன்று ஆளில்லையா!

'மாதரைக் கோறலும் மறத்து நீங்கிய
ஆதரைக் கோறலும் அழிவு செய்யினும்
தூதரைக் கோறல் தூய்தன்றும்'

—ஆகவே தூதுவராக வந்தவரைக் காத்தல் அரசின் கடமை என்பது என்றைக்கும் பொருந்தும் பொருளுரை தானே!

# 8 ஒருவனே தேவன்

'யாதும் ஊரே; யாவரும் கேளிர்' என்ருன் கணியன் பூங்குன்றன். யாவரும் கேளிராக ஒருமனப்பட்டு வாழ, 'ஒன்றேகுலம் ஒருவனே தேவன்' என்ற கொள்கையே அடிப்படையாம், இந்தச் சர்வ சமய சமரசத்தைக் கம்பன் தனது காப்பியத்தில் பல இடங்களிலும் வலியுறுத்துகிருன். அல்லா, ஜெஹோவா, பரமண்டலத்திலிருக்கும் பரம பிதா, பாற்கடலில் துயிலும் பரந்தாமன், அனைவரும் ஒருவனே என்ற மனப்பான்மையே உலக ஒருமைப் பாட்டுக்கு அடிப்படை!

ஆத்திசூடி இளம்பிறை யணிந்து
மோனத்திருக்கும் முழுவெண்மேனியான்
கருநிறங் கொண்டுபாற் கடல்மிசைக் கிடப்போன்
மகமது நபிக்கு மறையருள் புரிந்தோன்
ஏசுவின் தந்தை எனப்பல மதத்தினர்
உருவகத்தாலே உணர்ந்துணராது
பலவகையாகப் பரவிடும் பரம்பொருள்
ஒன்றே அதனியல் ஒளியுறும் அறிவாம்!
அதனிலை கண்டார் அல்லலை அகற்றினுர்
அதனருள் வாழ்த்தி அமரவாழ் வெய்துவோம்!

என்பது பாரதியின் பரந்த சிந்தனை. பொங்குபல சமயமெனும் நதிகள் எல்லாம் புகுந்து கலந்திட நிறைவாய்ப் பொங்கி ஓங்கும் கங்குகரை காணுத கடல் பரம்பொருள் என்ருர் வள்ளலார். உலகெங்கும் மேவிய தேவாலயந் தோறும் மேவு பெருமாளை அருணகிரி பரவினுர் தென்னுட்டுச் சிவன் எந்நாட்டுக்கும் இறைவன் என்பது

மணிவாக்கு. அவரவர் தம தமது அறிவு அறி இறையவர்—குறைவிலாதவர் என்பது நம்மாழ்வார் சமரசம். இந்தச் சமரசம் கம்பனின் கடவுள் வாழ்த்துப் பாடலிலேயே முழங்குகிறது.

உலகத்தைப் படைப்பவன் கடவுள். படைத்த உலகைக் காப்பவனும் அவனே! அழித்து நீக்குபவனும் அவனே! இவை அவனுக்கு விளையாட்டு. காட்டி நிற்கும் அண்டமெலாம் சாட்டையிலாப் பம்பரமாய் ஆட்டிவிளையாடுபவன் அவன். அவனே தலைவன். அவனுக்கே சரண் என்ற கருத்தமைந்த இப்பின்வரும் பாடல் எல்லாச் சமயத்தவர்க்கும் பொருந்துவது தானே!

"உலகம் யாவையும் தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகிலா விளை யாட்டுடையார் அவர்
தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே!"

(கடவுள் வாழ்த்து)

தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே என்று சரணாகதி செய்வதாகவும் சரண் ஆம்களே (ஆகுங்களே!) என்று நமக்கு அறிவுரை பகருவதாகவும் அமைந்துள்ளது.

## சிவனும் திருமாலும்

மேகம் கடலில் குளித்து வரப் புறப்படுகிறது. நேரே தான் வாரி உண்டு; அதைவாரி மொண்டு, பேரி கொண்டு, பெய்ய வேண்டாமா! அதற்குத்தான் புறப்படுகிறது. புறப்படும்போது வெள்ளை வெளேரென்று இருக்கிறது. கடல் நீரை முகந்து சூல் கொண்டு திரும்பும் போது கறுத்திருக்கிறது எப்படியாம்! அழகாக உவமை கூறுவான் கம்பன்; அழகுக்கு மட்டுமல்ல பயனுக்காகவும் தான். அவன் காலத்தில் சைவ வைணவச் சண்டை நாட்டில் இருக்கத்தான்

செய்தது. நமக்குள்ளே பேதமா - ஒரு மதத்திலும் உட்பிரிவா! உழக்கில் கிழக்கு மேற்கா! கவலை கவிஞனுக்கு மறந்தும் இராமனை வெறும் வைணவக் கடவுள் என்றுகூற மாட்டான் கம்பன் — முப்பரம் பொருளும் இணைந்த உருவாகவே காட்டுவான்! அதனால்தான் மேகம் திருநீறுபூசி வெள்ளிய தோற்றம் தந்த சிவன் போல வெண்மையாகப் புறப்பட்டது. திருமால் மாதிரித் திரும்பிற்று என்பான்!

"நீறு அணிந்த கடவுள் நிறத்த வான்
ஆறு அணிந்து சென்று ஆர்கலி மேய்ந்து அகில்
சேறு அணிந்த முலைத் திருமங்கைதன்
வீறு அணிந்தவன் மேனியின் மீண்டதே! (1. 1. 2.)

## ஒரே நீர், பல வடிவம்!

மலையில் மழை பொழிகிறது. அருவியாய் இழிந்து பொங்கிப் பெருகி வரும் மழை நீர், ஆறாய் ஓடிக் காலாய் நடந்து, மதகிடைச் சாடி, அணையில் கிடந்து, ஏரியாய்ப் பரந்து, கடைசியில் கடலில் கலக்கிறது. பெய்வது ஒரே மேகம் தண்ணீர் நிறம், மணம், உருவமற்றது. ஆனால், அது ஆற்று நீர், கேணிநீர், ஏரிநீர், சாக்கடைநீர் என்று கலந்திருக்கிற இடத்திற்கு ஏற்ப நாம பேதம் கொள்கிறதே! அது பெரிய தத்துவத்தைக் காட்டி நிற்கிறதாம் கம்பனுக்கு. கடவுளும் ஒருவர்தாம். உருவமற்றவர் தாம். ஆனால் சமயம்தோறும் அவனுக்கு நாமம், வடிவம் வேறுபடுகிறது என்கிறான்.

ஒருநாமம் ஓருருவம் ஒன்றில்லார்க்கு ஆயிரம்திருநாமம் பாடுகிறோமே! மறைகள் இது அல்ல; இது அல்ல என்று அன்மைச் சுட்டினால் (Negative) துதித்து இணைக்கும் இறைவனுக்கு அறிவிற் குறைபாடுள்ள மனிதன் நாமம், உருவம் தருவதையும் அந்த இறைவன் கருணையால், எளிமையாய் ஏற்கிறானே!

கல்லிடைப் பிறந்து போந்து, கடலிடைக் கலந்த நீத்தம்
எல்லையில் மறை களாலும் இயம்பரும் பொருளீ தென்னத்
தொல்லையில் ஒன்றே யாகித் துறைதொறும் பரந்த சூழ்ச்சிப்
பல்பெருஞ் சமயம் சொல்லும் பொருளும்போல் பரந்த தன்றே!

(1. 1. 19)

## யாரே கண்டார்!

இராமன், மணமகனாக அலங்காரம் செய்யப் பெற்று வீதியில் உலா வருகிறான். அழகனான இராமனை ஆரணங்குகள் காண்கின்றனர். அவனது முழுவடிவழகு காண யாருக்கு முடியும்! தோள் கண்டவள், 'தோள்தான் அழகு' என்கிறாள். தாள் கண்டவள் 'தாளே'(வே) என்கிறாள். தடக்கை கண்ட மாதோ அதிலேயே ஈடுபட்டு நின்று விடுகிறாள். எந்தப் பெண்தான் முழுவடிவழகும் கண்டாள்! ஏன்? அவர்கள் கண் பார்வை சரியில்லையா! அப்படியில்லை! அவர்களின் கண்கள் ஒளி பொருந்தியவை! ['வாள் கொண்ட கண்ணார்! சமயம் ஒவ்வொன்றும் 'நான் சொல்லும் கடவுளே பெரியவன் என்று வாதிடுமாப் போல அந்த மிதிலை மகளிரும் தாம் கண்ட இராமனின் உறுப்பே அழகு என்று வாதிட்டனர். முழுதிதன்மை காணவில்லை. இந்த நிகழ்ச்சி எவ்வளவு பெரிய தத்துவத்தைச் சொல்லக் கம்பனுக்கு கை கொடுத்து விட்டது.

சமய கோடிகள் எல்லாம் தன் தெய்வம் என் தெய்வம் என்று எங்கணும் தொடர்ந்து எதிர் வழக்கிட நின்றது' பரம்பொருள் என்பார் தாயுமானவர். அந்தச்சமயப் பூசலை மறைமுகமாகச் சுட்டிப், பார்போற்றும் பரமன் ஒருவனே என்ற தத்துவத்தை, சமரசத்தை, அழகாகக் காட்டிவிடுகிறான் கம்பன்!

## உலகிற்கு வேண்டியது

சமய பேதங்கள் இன்று பெருகிவிட்டன. மதத்தின் பெயரால் மதம் கொண்டலையும் மனித சமுதாயம். கம்பனும், பிற அருள் நெறியாளர்களும் கண்ட சமரசத்தை என்று முழுமையாக உணர்ந்து போற்றுமோ அன்றுதான் உலகம் ஒருகுலமாகும். 'அவரவர் இறையவர் குறைவிலர்' என்ற பரந்தமனம் வேண்டும். மதப்போர்கள், மதமாற்றங்கள் இன்று அதிகம் தென்படுகின்றன. கம்பனின் சர்வ சமய சமரசம் உலகிற்கு இன்றும் என்றும் நல்வழி காட்டுவன!

# 9 இழைக்கின்ற விதி

'அதிருஷ்டம்' என்ற வடமொழிச் சொல்லுக்குக் 'காணப் படாதது' என்று பொருள். கண்ணால் காணப் படாமல் ஏதோ ஒரு சக்தி நம்மை ஆட்டுவிக்கிறது. அது வேறெங்கும் உற்பத்தியாகவில்லை. நம் செயல்களின் பயனாகவே விளைகிறது. 'கர்மம்' என்றும் 'வினைப்பயன்' என்றும் 'விதி' எனவும் பல நாமம் கொண்டு விளங்குவது அதுவே!

'வினை விதைத்தால் வினை விளையும்; தினை விதைத்தால் தினை விளையும்' என்பர். விதை ஒன்று போட்டால் சுரை ஒன்று முளைக்குமா? 'அவரை விதைத்தால் துவரை முளைக்குமா'—என்றெல்லாம் சாதாரணமாக மக்கள் கூறுவர். ஒரு செயலின் பயன் அப்படியே விளைவு தரும். நன்மை செய்பவன் நன்மை பெறுவான். 'வாள் எடுத்தவன் வாளால் சாவான்' என்பது விவிலியம் கூறும் நீதி. பிறவிக் கொள்கையை நம்பும் இந்து சமயத்தினரும், சமண சமயத் தினரும் ஒரு பிறவியில் செய்யும் செயல்களின் பயன் அடுத்த பிறவியிலும் தொடரும் என்பர்.

## பசுவும் கன்றும்

விதி, வினை இவற்றை விளக்க நாலடியார் அழகிய உவமை காட்டுகிறது. ஒரு பெரிய மந்தையாகப் பசுக் கூட்டங்கள் செல்கின்றன. ஒரு கன்று தனியே இருக்கிறது. அதனை அந்த மந்தையினுள் ஒட்டி விட்டால், தன் தாய்ப் பசுவைக் கண்டு, 'அம்மா' என்றழைத்து, அதன் மடியில் வாய் வைக்கும். அத்தனை பசுக்களின் மத்தியில் தாயை அறியவல்லது கன்று. அதுபோல எந்தப் பிறவி எடுத்து எப்படி வாழ்ந்தாலும், வினைதன்னைச் செய்தவனைக்

கண்டு அவனிடம் பலன்தர ஓடி வந்துவிடும். நன்மையோ, தீமையோ விளைவது அவனவன் வினையைப் பொறுத்தது என்கிறது நாலடி.

'பல்லாவுள் உய்த்து விடினும் குழக்கன்று
வல்லதாம் தாய்நாடிக் கோடலைத்-தொல்லைப்
பழவினையும் அன்ன தகைத்தே தற்செய்த
கிழவனை நாடிக் கொளற்கு.

## ஊழிற் பெருவலி யாவுள?

'ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான்முந் துறும் என்றது வான்மறை. 'நீர்வழிப்
படூஉம் புணைபோல் ஆருயிர் முறை வழிபடூஉம்' என்பது

புறநானூறு கூறும் உண்மை. இந்த ஊழ் அன்றும் இன்றும் என்றும் மன்பதை உலகில் பேசப்படுகிற தத்துவமே! நல்லவன் ஒருவன் தாழ்ந்து துயர்ப்பட்டால் 'நல்லவனுக்கு ஏன் ஐயா இந்தக்கதி! விதிப்பயன் போலும்!' என்கிறோம். கோவலனாகிய நல்லவன், கருணைமறவன், இல்லோர் செம்மல், செல்லாச்செல்வன், துயர்ப் பட்டபோது,

'இம்மைச் செய்தன யானறி நல்வினை
உம்மைப் பயன்கொல் ஒருதனி உழந்துஇத்
திருத்தகு மாமணிக் கொழுந்துடன் போந்தது!'

என்கிறான் மாடல மறையோன்.

## இராமனுக்குமா?

இராமனுக்குச் சக்கரவர்த்தியாக முடிசூட்டு விழா மறு நாள் நடைபெற இருக்கிறது. முதல் நாளிரவிலேயே கைகேயி வரம் கேட்டு இராமன் காடேகச் செய்கிறாள். இது ஏன்? நாள் பார்த்து முகூர்த்தம் வைத்த வசிட்டன் பேசுகிறான்.

வேதமுதல்வன் ஆயிற்றே. பின், அவனுக்கு முன்னே விதி செல்வானேன்! தேவரின் நல்விதியும், அரக்கரின் தீ விதியும்தான் இராமனை வனத்திற்கு வழிகாட்டி இழுத்துச் சென்றன.

வினைப்பயனுக்கு யாரும் விதிவிலக்குப் பெற முடியாது. எனப்பாத்திரங்களின் வாயிலாகவும் கம்பன் விளக்குகிறான்.

## தசரதன்

தசரதன் 'சப்தவேதி' (ஒலிகேட்ட மாத்திரத்தில் குறி பார்த்து அம்பு) எய்வதில் வல்லவன். ஒருநாள் வேட்டைக்குச் சென்றான். நீரில் 'களுக்' என்ற சத்தம் கேட்டது. யானை துதிக்கையால் தண்ணீர் முகப்பது போன்றிருந்தது. அம்பு போட்டான் தசரதன். வீழ்ந்தது யானையன்று; ஒரு முனிகுமாரன் அலறி வீழ்ந்தான். கண்ணற்ற பெற்றோர்களின் ஒரேமைந்தன் அந்தச் சிறுவன் என்று அவன் உயிர் விடுமுன் சொல்ல, அவனிறந்ததும் அவனுடலை எடுத்துச் சென்று, அவனது பெற்றோரிடம் தந்து நடந்த செய்திகளைக் கூறினான். மகனையிழந்த சோகத் தால் துடித்த முனிவன் இதுபோல் புத்திர சோகத்தால் தசரதனும் மாயக் கடவது என்று சாபம் தந்தார்.

*''எம்போல் விடலை பிரிய, பண்ணும் பரிமா உடையாய்*
*அடைவாய் படர் வான்''*

என்பது சாபம் அப்போதைக்குத் தசரதன் மகிழ்ச்சி கொண்டான். காரணம் அப்போது அவனுக்குக் குழந்தை களில்லை. புத்திர சோகத்தால் மடிவாய் என்ற முனிவனின் சாபம் பலிக்கப்புதல்வர்கள் பிறப்பார்கள் என்ற நம்பிக்கை பிறந்தது.

'வாழ்வினை நுதலிய மங்கலத்து நாள்'
தாழ்வினை அதுவரச் சீரை சாத்தினன்.
சூழ்வினை நான்முகத்து ஒருவன் சூழினும்
ஊழ்வினை ஒருவரால் ஒழிக்கற் பாலதோ! (2. 4. 159)

ஆம், நான்முகன் உலகினரைப் படைத்து, அவர் தலை விதியைக் நிர்ணயிக்கின்றவன் என்பர். அவனுக்கும் விதியா? அவனாலேயே விதியைக் கடக்க முடியாது என்று உயர்வு நவிற்சியாகச் சொல்லி, மானிடர் விதியைக் கடப்பது அரிது என்பதைக் காட்டுகிறான் கம்பன்.

கைகேயித் தாயின் வரத்தால் இராமன் காடு செல்ல நேரிட்டது என்றறிந்த இலக்குவன் சீறி எழுந்து உலகை. மகளிரை, யாவரையும் அழிப்பேன் என்று சினமொழி பேசுகிறான்.

அங்கு வந்த இராமன் அவனை அமைதிப்படுத்த,

"நதியின் பிழையன்று; நறும்புனல் இன்மை; அற்றே
பதியின் பிழையன்று பயந்து நமைப் புரந்தாள்
மதியின் பிழையன்று மகன் பிழையன்று மைந்த
விதியின் பிழை நீ இதற்கு என்னை வெகுண்டது"
(2. 4. 129)

என்றான். இராமனும், விதி தவிர்க்க இயலாதென்று பேசுகிறான்.

மகுடம் புனைந்து மகன் வருவான் என்று பார்த்திருந்த கோசலைமுன் இராமன் சென்ற நிலையை விவரிக்கையில், அவன் கவரியும் குடையுமில்லாமல் சென்றான் என்ற கம்பன், கவரிக்குப் பதில் 'இழைக்கின்ற விதி முன் செல்ல' வும், குடைக்குப்பதில் 'தருமம் பின்னால் இரங்கி ஏக' வும், இராமன் சென்றான்" என்பார். இழைக்கின்ற விதி கவரி போல் மேலும் கீழும் இயங்குகிறது. இராமனுக்குத் தான் விதி கிடையாதே. அவன் விதிக்கும் விதியான

## சாபம் பலித்தது

பிறர்க்கின்று, அறிந்தோ அறியாமலோ செய்தால் அதன் பயனைத்தான் அனுபவிக்க நேரும். ஆதரவாயிருந்த ஆருயிர்ப் புதல்வனைப் பிரிந்ததால் முனிவனும், அவனது மனைவியும் துன்புற்றார்கள், அவர்களை அத்துன்பத்துக்குள் ளாக்கிய தசரதனும் மகன் இராமனைப் பிரிந்த சோகம் தாங்காமல் உயிர்விட நேர்ந்தது. இதனை நாம் எடுத்துக் காட்டக் காரணம், தசரதனே கோசலையிடம் தனக்குள்ள சாபத்தைக்கூறி அதனால் தான் இறப்பது திண்ணம் என்றும் சொல்கிறான்!

## நன்மைக்குப் பலன்

தீமையின் பயனை அனுபவிப்பது போல் நன்மையின் பலனையும் ஒருவன் அனுபவிக்கிறான். சானகியை இராவணன் எடுத்துச்சென்று விமானத்தில் பறக்கிறான். சடாயு எதிர்ப்பட்டுத் தடுக்கிறான் 'சரண் எனக்கு யார்' என்ற தவித்த பிராட்டிக்கு 'அபயம்' தந்து, தான் பறவை ஆயுதமில்லாதவன், கிழவன் என்பதையும் பொருட் படுத்தாது தசமுகனுடன் போரிட்டு உயிர் விடுகிறான். 'தெய்வமரணம்' பெறுகிறான். இந்த நல்வினைக்கும் பயன் கிடைக்கிறது. இராமனின் கையால் ஈமக்கடன்கள் செய்யப் பெற்று வைகுந்த பதவியும் பெறுகிறான். பெற்ற தகப்பன் தசரதனுக்குக் கிடைக்காத அந்தப்பேறு கழுகரசன் சடாயுவுக்குக் கிடைக்கிறது. இதன் காரணம் அவன் செய்த நற்செயலே என்பது உள்ளங்கை நெல்லிக்கனி.

## இரக்கமின்மையும் ஒழுக்கமின்மையும்

தம்பி சுக்கிரீவனிடத்து இரக்கம் காட்டாது அவனைக் கொல்ல எண்ணித் துரத்தியடித்தவன் வாலி. அவன் மனைவி உருமையையும் தன்னுடையவளாக்கிக் கொண்ட ஒழுக்க

மின்மையும் அவனிடம் இராமன் கண்ட பெருங்குற்றங் களாம். நாலு வேதங்களை கற்றுணர்ந்த வாலி, சிவபக்தனை வாலி, பாற்கடலைக் கடைந்து அமுதம் எடுத்தீயும் வாலி தனக்கு வரம் கேட்டபோதும் முறையற்ற வரம் கேட்டவன்.

'கிட்டுவள் பொரக் கிடைக்கின் அன்னவர்
பட்டநல் வலம் பாகம் எய்துவான், அவன்.

ஆனால் என்ன இருந்தென்ன? அவன் மார்பை இராகவன் வாளி துளைத்தது அவனது தீமையின் அறுவடைதானே!

## நன்மைக்குப் பரிசு

அரக்கர் குடியில் பிறந்தும் அறத்தின் வடிவமாக வாழ்ந்த வீடணன், கொடுமையில்லானாய்க், குணம் திகழ் குரிசிலாய் அறத்தின்பாலும், நீதியிடத்தும் நேயமிக்கவனாய் இருக்கிறான் மறத்தின் பக்கம் இருந்து மாயாப்பழி பெறுவதா? அறத்தின்பால் சென்று அழியாப்புகழ் பெறுவதா என்ற நிலையில், பாசத்தை வென்று பண்பில் தலை நின்றான். அந்த நடுவுநிலைமை அவனைக் களவியல் அரக்கன் பின்னே வந்த நிலையை மாற்றி, இராமன் தம்பியாக வீடண ஆழ்வாராக ஆக்குகிறது.

## உயிர் கொடுத்துப்பழி கொண்டான்

முக்கோடி வாணாள், முயன்றுடைய பெருந்தவம் எக் கோடி யாராலும் வெலப்படாய் என்ற வரம் எல்லாம் பெற்றுச் சிறந்த இராவணனின் விதிப்பயன்தானே மயிலிளஞ்சாயலாளை மனச் சிறையில் வைத்தது!

'விதியது வலியிஞலும் மேலுள விளைவிஞலும்,
பதியுறு கேடுவந்து குறுகிய பயத்திஞலும்
கதியுறு பொறியின் வெய்ய காமநோய், கல்வி நோக்கா
மதியிலி மறையச் செய்த தீமைபோல் வளர்ந்த தன்றே.
(3.7.86.)

கும்பகர்ணனும் இராம இராவணப் போர் மூண்டதற்குக் காரணம் விதியே என்பான்'

'தீட்டியின் விடமன்ன கற்பின் செல்வியை
விட்டிலையோ இது விதியின் வண்ணமே!

என்று கூறுகிருன்.

வேதவதி என்ற பெண்ணைத்தசமுகன் தொடச் சென்றபோது அவள் அக்கினியில் வீழ்ந்திறந்தாள். அவள் தான் சிதையாகவந்து இராவணனுக்கு இறுதி தந்தாள் என்று வீடணன் பேசுகிருன்.

"தீயிடைக் குளித்தஅத் தெய்வக் கற்பிஞள்
வாயிடை மொழிந்தசொல் மறுக்க வல்லமோ?
"நோய் உனக்குயான் "என் றுவன்று ளாள் அவள்
ஆயவள் சீதைபண் டமுதில் தோன்றிஞள்"
(6-2-81.)

வேதவதியின் வேதனைக்கண்ணீர். சீதையின் கண்ணீர் இரண்டும் இராவணனைக் குலநாசம் செய்தது. மேலும், தங்கை சூர்ப்பனகையின் கணவனைத், தன் மைத்துனனைக் கொல்வித்த இராவணனை விதி பழி வாங்கியது சூர்ப்பனகை வடிவத்திலேயே! 'கொல்லாத மைத்துனனைக் கொன்ருய் என்றே பல்லாலே இதழ் அதுக்கும் கொடும் பாவி நெடும்பாரப் பழி தீர்த்தாளே!' என்று வீடணனும்

கூறுகிறான். இராவணன், தன் குலநாசத்திற்கே காரண மாகிறான். 'பிறர்க்கின்னா முற்பகல் செய்யின், தமக்கின்னா பிற்பகல் தாமே வரும், அல்லவா!

கம்பன் சொன்ன கருத்து இந்தநாட்டில் ஆன்றோர் பலரின் அனுபவ உண்மையாதலால் இன்றும் நின்று நிலவுகிறது, 'கலியுகத்தில் கைமேற் பலன்' என்று வினையின் பயனைக் குறித்து இன்றும். யாவரும் கூறுகின்றனர்.

# 10 அரசியலில் பழிவாங்கல்

ஒரு கட்சியின் ஆட்சி அதன் அரசுரிமைப் பதவியிலிருந்து பதவிக்காலம் முடிந்ததும் விலக்கப்படுகிறது. அல்லது இடையிலே விலக்கப்படுகிறது. மீண்டும் அந்தக் கட்சி ஆட்சிக்கு வர முடியவில்லை. வேறு ஒரு கட்சி அரசுரிமைப் பதவியில் அமர்த்தப்படுகிறது. அவ்வாறு அமர்த்தப்படும் அரசு தனக்கு முந்திய அரசில் பணிபுரிந்த ஊழியர்களையும், பிரஜைகளையும், அரசியல்வாதிகளையும் பழிக்குப்பழி என்று அவர்களைத் துன்புறுத்தியும், பொய் வழக்குகள் போட்டும், அவர்கள் மீது அவதூறுகளை அள்ளிவீசியும் வருகிறார்கள். இது இன்றைய அரசியல் கட்சிகளில் சாதாரணமாக நடந்து வருகிறது. இது நமது நாட்டில் மட்டுமல்ல எல்லா நாடுகளிலும் தான். இது தவறு என்று மக்கள் உணருகிறார்கள். அரசியலில் இந்த போக்கைக் கம்பன் வன்மையாகக் கண்டிக்கிறான்.

இராவண வதத்துக்குப் பின் சீதையை அழைத்துப் போக அனுமன் வருகிறான். அப்பொழுது அனுமன் பிராட்டியிடம், "இராவணனின் ஆணைப்படி முன்னர் உங்களை மிரட்டியும், பயமுறுத்தியும் துன்புறுத்திய அரக்கியர்களை இப்போது அழிக்கப் போகிறேன்'' என்று சொல்கிறான். இதைப் பிராட்டி ஒப்புக்கொள்ளவில்லை. இந்தக் காட்சி யுத்தக் காண்டத்தில் மீட்சிப் படலத்திலே வருகிறது.

அன்று :

அனுமன் சீதையிடம் மங்கலச்செய்தி சொல்கிறான்.

"ஏழை, சோபனம்! ஏந்திழை, சோபனம்!
வாழி, சோபனம்! மங்கல சோபனம்
ஆழி ஆன அரக்கனை ஆரியச்
சூழியானை துகைத்தது, சோபனம்!" (6. 37. 16.)

கதியற்றது போல நினைத்துக்கொண்டிருந்த பெண்ணே உனக்கு வாழ்வு வந்துவிட்டது. எல்லா அணிகளையும் அணிந்து மங்கலமாக வாழ்வாய். இந்தச் சோபனம் நிலை பெற்று வாழ்வதாக! மங்கல சோபனம். சமுத்திரம் போல இருந்த அரக்கனை ஒரு யானையானது துகைத்து அழித்து விட்டது. இராமபாணங்கள் இலங்கேஸ்வரனை வீழ்த்தி விட்டன.

இது தான் நான் உனக்குச் சொல்லவந்த "சோபனச் செய்தி"— என்று சொல்லி ஆனந்தக் கூத்தாடுகிறான் அனுமன்.

சீதைக்கு என்ன சொல்வதென்றே புரியவில்லை.

"இனையது, இன்னது. இயம்புவது என்பது ஓர்
நினைவு இலாது நெடிது இருந்தாள்........."

பிறகு மெல்லப்பேச ஆரம்பிக்கிறாள்.

"மேக்கு நீங்கிய வெள்ள உவகையால்
ஏக்கமுற்று, "ஒன்று இயம்புவது யாது?" என
நோக்கி நோக்கி, அரிது என நொந்துளேன்"
பாக்கியம் பெரும் பித்தும் பயக்குமோ? 6-37-26

இதற்கு மேலானது ஒன்று இல்லையென்னும் படி பொங்கிய பெருமகிழ்ச்சியால் ஏங்கிப்போனேன். ஏதாவது

பேச வேண்டும், ஆனால் ஒன்றுமே தோன்றவில்லையே என் செய்வது என்று சிந்தித்துப் பார்த்தேன். முடியவில்லையே என்று வருந்துகிறேன். பாக்கியம் பெரும் பைத்தியமாக ஆக்கி விடுமோ என்கிறாள்.

'முன்பு இச் சிறையிலிருந்து உன்னை விடுவிக்கிறேன் என்று கூறினாய், இப்பொழுது அதையும் செய்துவிட்டாய் உனக்கு என்ன பாக்கியம் அளிப்பது என்றே நினைத்துக் கொண்டிருந்தேன். ஆதலால் பேச்சினை மறந்து ஓவியம் போல் செயலற்று நின்று விட்டேன். நான் செய்ய வேண்டியது என்ன என்பதை நீயே சொல்லு? என்கிறாள் பிராட்டி. அதற்கு அனுமன்:-

"எனக்கு அளிக்கும் வரம், எம் பிராட்டி! நின்
மனக் களிக்கு மற்று உன்னை அம் மானவன்—
தனக்கு அளிக்கும் பணியினும் தக்கதோ.........."

இராமனிடத்தில் உன்னை ஒப்படைக்கும் பணியினை விடவா எனக்கு வேறு வரம் வேண்டும்? அதைவிட தக்கதொரு வரமும் உண்டா என்கிறான்.

"என உரைத்து, திரிசடையாள், எம்மோய்!
மனவினில் சுடர் மாமுக மாட்சியாள்—
தனை ஒழித்து, இவ்வரக்கியர் தங்களை
வினையினில் சுடவேண்டுவென் யான், என்றான்"

6–37–31

அனுமன், பிராட்டியை நோக்கி தாயே ஒளி பொருந்திய முகத்தினையுடைய திரிசடையைத்தவிர மற்றுள்ளஅரக்கியர்கள் அனைவரையும் அவர்களுடைய தீவினைக்குத் தக்கவாறு தண்டிக்க விரும்புகிறேன்' என்கிறான்.

உரை அலா உரை உன்னை உரைத்து, உராய்
விரைய ஓடி, ''விழுங்குவம்'' என்றுளார்
வரை செய் மேனியை வள் உகிரால் பிளந்து.
இரை செய்வேன், மறலிக்கு, இனி என்னுமால்

சொல்லத்தகாத வார்த்தைகளையெல்லாம் உன்னை நோக்கிச் சொல்லத் துணிந்தார்கள். உன்னை விழுங்கி விடுவோம் என்றெல்லாம் பயமுறுத்தினர்கள். மலைபோன்ற இவர்களுடைய மேனியை நகங்களால் பிளந்து எமனுக்கு இரையாக்குவேன்,

குடலை சிதைத்து, இரத்தத்தை உறிஞ்சி, இவர்கள் உடலினை முறுக்கிப் பிழிந்து சாப்பிடுவேன் என்று அனுமன் சொன்னதும் அங்குள்ள முரட்டு அரக்கியர்கள்.

''அன்னை! நின் பாதமே
விடலம்; மெய்ச்சரண்''

தாயே! உன்னுடைய பாதங்களை விடமாட்டோம் உண்மையாக நாங்கள் உன்னைச் சரணடைகிறோம். நீ தான் எங்களைக் காப்பாற்ற வேண்டும் என்று சீதையின் கால் களில் விழுகிறார்கள்.

பிராட்டியின் கருணையுள்ளத்தை கூர்ந்து நோக்குங்கள். முந்தைய அரசில் பணிபுரிந்த கொடியவர்களைக்கூட பின்னர் வந்த அரசு பழிவாங்கக் கூடாது என்னும் கொள்கையை இங்கே சுட்டிக் காட்டுகிறாள் பிராட்டி.

''அன்னை அஞ்சன்மின், அஞ்சன்மின்! நீர், என,
மன்னும் மாருதி மாமுகம் நோக்கி, 'வேறு
என்ன தீமை இவர் இழைத்தார், அவன்
சொன்ன சொல்லினது அல்லது?'-தூய்மையோய்!''

சீதா பிராட்டி அந்த அரக்கியர்களை நோக்கிப் 'பயப்படாதீர்! பயப்படாதீர்!" என்று ஆறுதல் அளித்து விட்டு பின்னர் சொல்லுகிருள்,'' இவர்கள் என்ன தீமை யைச் செய்தார்கள்? தங்கள் அரசனுகிய இராவணனின் கட்டளைக்குக் கீழ்ப்படிந்துதானே நடந்தார்கள்? அவன் சொன்னதை தானே செய்தார்கள்? என் வினைப்பயனுகத் தானே இப்படியெல்லாம் நிகழ்ந்தன. கூனியைக் காட்டி லும் இவர்கள் கொடியவர்களா என்ன? அதையே ஒரு பொருட்டாக நான் எடுத்துக் கொள்ளவில்லையே!'' என் கிருள். (இவர்கள் செய்ததையா ஒருகுற்றமாக எடுத்துக் கொள்ளப் போகிறேன் என்பது இங்கு குறிப்பு)

எனக்கு நீ அருள் இவ்வரம்; தீவினை
தனக்கு வாழ்விடம் ஆயசழக்கியர்
மனக்கு நோய் செயல்... ... ... ..."

(சழக்கியர்— துஷ்டப்பெண்கள்)

தீவினைகளையே உருவாகக் கொண்ட துஷ்டப் பெண் களின் மனத்துக்குக்கூட துன்பம்செய்யாதே. இந்தவரத்தை நீ எனக்குத் தரவேண்டும் என்கிருள் பிராட்டி.

கற்பனை கடந்த ஒன்றை கம்பன் இங்கே கற்பனை செய்துகாட்டுகிருன். அதாவது எக்காலத்துக்கும் பொருந்து கின்ற அரசியல் உண்மையைத்தான் எனக் கருதுவது மிகையாகாது. அரசப்பதவிக்கு வருபவர்கள் முந்திய அரசாங்கத்தில் பணிபுரிந்தவர்களைத் துன்புறுத்தக்கூடாது; அவர்கள் கொடியவர்களாயிருந்தால்கூட விட்டுவிடுதல் உத்தமம்.

கம்பன் காட்டும் இக்கொள்கை இன்றுள்ள அரசியல் வாதிகளுக்கும், வருங்கால அரசுகளுக்கும் ஓர் ஒளிவிளக் காகப் பிரகாசிக்கும்.

# 11 மாற்ருன் தோட்டத்து மல்லிகை

"மாற்ருன் தோட்டத்து மல்லிகைக்கும் மணம் இருக்கும்." மல்லிகைக் கொடி நம்முடைய தோட்டத்திலிருந்தாலும், எதிரியின் தோட்டத்திலிருந்தாலும் மணப்பது இயற்கை. இது இக்காலத்தில் எப்படிப் பொருந்துகிறதோ, அப்படியே கம்பன் காலத்திலும், அதற்கு முற்பட்டகாலத்திலும், நின்று நிலவியிருக்கிறது.

இதை எப்படிக் கவிஞன் கூறியுள்ளான் என்று பார்க்கலாம்.

அனுமன் (ஊர் தேடு படலத்திலே)

இலங்கையூரில் பலரையும் கூர்ந்து நோக்கியவண்ணம் சஞ்சரிக்கிருன். இரவிலே. நிசாசரர் (நிசியில் சஞ்சரிப்பவர்கள்) அரக்கர் ஆதலின் பகலில் போல் இரவிலும் சுறுசுறுப்பாயிருக்கிருர்கள். இரவில் பகலைக் காட்டிலும். மிக அதிக சுறுசுறுப்பாகவே காணப்படுகிருர்கள். "இருளின் சக்திகள்" என்று கூறத்தக்க இயல்பினரல்லவா?

அனுமன் விபீஷணனை இன்னுன் என்று அப்பொழுது தெரிந்து கொள்ளவில்லையென்ருலும் ஒரு பரமசாது ஏன் — ஒரு மகாத்மாபோலவே காணப்படுகிருன் என்று கருதுகிருன்.

இப்படி அனுமன் நினைப்பதிலே "மாற்ருன் தோட்டத்து மல்லிகைக்கும் மணம் இருக்கும்" என்ற மனப்பான்மை இனிது புலனுகிறது. மனம்போனபடி மாற்ருனைப் புகழ்ந்து பாராட்டுவதும், இகழ்ந்து புறக்கணிப்பதும் சரியன்று; தரமறிந்து பாராட்டுவதே மேன்மையாகும்.

விபீஷணனைப் பார்த்தவுடன் அவனை "குற்றம் இலாது ஓர் குணத்தினன் இவன்" எனக் கொண்ட அனுமன் அடுத்து இந்திரசித்தைப் பார்க்கிறான். அவனுடைய வீரப்பொலிவு அனுமனையே திகைக்கச் செய்கிறது

"இளைய வீரனும், ஏந்தலும், இருவரும், பலநாள் உளைய உள்ள போர் இவனொடும் உளது" என உணர்ந்துகொள்ளுகிறான் அனுமன், இப்படிப்பட்ட ஒருவனை மகனாகப்பெற்ற இராவணன் இம்மூன்று உலகினையும் வென்றதில் வியப்பொன்றும் இல்லை.

"இவனை இன்துணை உடைய போர் இராவணன், என்னே,
புவனம் மூன்றையும் வென்றது ஓர் பொருள் எனப்புகறல்?
சிவனை, நான்முகத்து ஒருவனை, திருநெடுமால் ஆம்
அவனை, அல்லவர் நிகர்ப்பவர் என்பதும், அறிவோ?"

மும்மூர்த்திகளைத் தவிர இவனை வேறு யாராலும் வெல்லமுடியாது எனத்துணிகிறான். இவ்வாறு அனுமன் வாயிலாக இக்கருத்தை வெளிப்படுத்திய கம்பன் மேலும் மாலியவான் மூலமாக உணர்த்துகிறான். இக்காட்சி யுத்த காண்டத்திலே மாயா சீதைப் படலத்திலே வருகிறது

இங்கே அனுமனின் வீரத்தையும், இராமனது பேராண்மையையும் புகழ்ந்துரைக்கிறான் மாலியவான்.

"... ...... ... ...கோள் இலா வேதம் கூறும்
இறைவர்கள் மூவர் என்பது? எண் இலார் எண்ணமேதான்;
அறை கழல் அனுமனோடும் நால்வரே முதல்வர் அம்மா?"

குற்றம் இல்லாத வேதம் இறைவர்கள் மூவர் என்று கூறுகிறது. ஆனால் அனுமனையும் சேர்த்து அவர்கள் நால்வர் என்கிறான் மாலியவான்.

'வாலியை வாளிஒன்றால் வானிடை வைத்து, வாரி
வேலையை வென்று, கும்பகருணனை வீட்டினானை,
ஆலியின் மொக்குள் அன்ன அரக்கரோ,
அமரின் வெல்வார்? ... ... ... ... ... ...''

ஒரே அம்பால் வாலியை வானுலகுக்கு அனுப்பி வைத்தான். பெரிய சமுத்திரத்தை வென்று அதைக் கடந்து வந்தான். கும்பகருணனையும் போரில் வீழ்த்தி விட்டான். இத்தகைய வீர பராக்கிரமம் வாய்ந்த இராமனை, மழைநீரில் தோன்றி மறையும் நீர்க்குமிழி போன்ற அரக்கர்களா வெல்வார்கள் என்கிறான் மாலியவான்.

எதிரிகள் என்ற போதிலும் அவர்களுடைய வீரத்தைப் பாராட்டுகிறான். அதை எடுத்துக்காட்டி இராவணனுக்கு அறிவுறுத்துகிறான் மாலியவான். பகைவன் என்றாலும் அவன் பராக்கிரமச் செயல்களை எண்ணி பார்க்க வேண்டும் என்கிறான் இராமன் வாயிலாக:

அடுத்து இந்தக் கருத்து மீண்டும் வலியுறுத்தப்படும் ஓர் இடத்தினைக் காண்போம்.

இலங்கையின் அழகைக் கண்டு இராமனே வியந்து பாராட்டுகிறான். இக்காட்சி (யுத்தகாண்டத்தில் இலங்கை காண் படலத்திலே வருகிறது.

"நம் திருநகரே ஆதி வேறு உள நகர்கட்கு எல்லாம்
வந்த பேர் உவமை கூறி வழுத்துவான் அமைந்த காலை
இந்திரன் இருக்கை என்பர்; இலங்கையை எடுத்துக்
காட்டார்
அந்தரம் உணர்தல் தேற்றார், அருங்கவிப் புலவர் அம்மா!''

நம்முடைய அயோத்தி நகருக்கு உவமானம் சொல்லும் புலவர்கள் அனைவரும் இது அமராவதி போன்றது என்பார்கள். [அதாவது அமராவதி அயோத்தியைவிட அழகானது என்பது குறிப்பு] அவர்கள் இலங்கையை அறிந்திருக்க மாட்டார்கள் போலும் அப்படி அறிந்திருந்தால் அந்த அமராவதிக்கே இந்த இலங்கையை அவர்கள் ஒப்பிடுவார்கள், என்கிறான் இராமன்.

குற்றமில்லாத செம்பொன்னால் இழைக்கப் பெற்றிருக்கிறது இந்த இலங்கைமா நகரம். இதில் சூரியன் தன் ஒளிக்கற்றைகளை பாய்ச்சுவதற்கே வெட்கப்படுவது போலிருக்கிறது. (இந்த நகரின் ஒலியினைக்கண்டு சூரியனே வெட்கப்படுகிறதாம். தமது ஒலியினை நினைத்து என்பது குறிப்பு) சூரியனுடையஒளியில்முழு மாணிக்கம்பிரகாசிப்பது போல இருக்கிறது இந்நகர், பேரறிஞரும் கூட இதன் அழகைச் சித்தரிக்க முடியாது. இந்த மாளிகையைப் படைத்திருக்கிற தொழில் நுட்பம் எத்தகையது என்றே புலனாகவில்லை!

விரிகின்ற கிரணங்களை உடையதாகி, மாணிக்கங்கள் ஒளிசெய்ய, சுடர்களைச் சொரிந்தாற்போல் வானத்தில் தோன்றுகிறது இதன் தோற்றம். பகைவர்களோடு மோதி எப்பொழுதும் வெற்றி வாகையே சூடிப் பழக்கப்பட்ட அனுமன் மூட்டிய தீயால் இன்னும் எரிந்து கொண்டிருக்கிறது போலும் இந்நகரம். இப்படிப்பட்ட இலங்கைநகரைப் பார்ப்பாய் என்கிறான் இராமன் இலட்சுமணனிடம்,

முதல் நாள் போரில் தோற்றுத் திரும்பிய இராவணன் இராமபாணத்தின் சிறப்பை, வேகத்தை, ஆற்றலை எல்லாம் புகழ்ந்துரைக்கிறான். போர்க்களத்திலேயே இலக்குவனின் ஆற்றலைப் புகழ்ந்து "ஒருவன் நீ" (ஒப்பற்ற வீரன் நீ) என்று கைதூக்கிப் போற்றுகிறான். தோற்று வந்த பின்பு இராமனின் போராற்றல் அவன் நெஞ்சில் நின்று நாவில்

வருகிறது. 'கூனி கூன் போக உண்டை தெரித்த நாளில் இருந்ததுபோல்தான் போர்க்களத்திலும் இராமனின் முக பாவம் இருந்தது' எனவும்,

இராகவன் வாளி ஊழித் தீயையும் தீய்க்கும், செல்லும் திசையையும் தீய்க்கும், சொல்லும் வாயையும் தீய்க்கும்; முன்னின் மனத்தையும் தீய்க்கும், என்றும்'

'கவிஞர் நாவில் பொருள் குறித்து அமர்ந்த நாமச் சொல் போலப் பழுதில்லாமல். தப்பாமல் சேர்வது, எனவும்,

'மாயன் ஆயிரம் தோளும் இராமனின் விரல் ஒன்றின் ஆற்றற்கு ஆற்று' என்றும்

'வேதம் தப்பின போதும் அன்னான் தனுவுமிழ் சரங்கள் தப்பா' எனவும், பலவாறு புகழ்கிறான். அழகிலும் வீரத்திலும் இராமனுக்கு யாருமே நிகரில்லை' என்று கூற,

இராமனைக் காணும்போது, அழகில் மன்மதன் நாய்க்குச்சமம். வீரத்தில் நான் நாய்க்குச் சமம்' என்கிறான்

'போயினித் தெரிவது என்னே! பொறையினால் உலகம் போலும்
வேயெனத் தகைய தோளி ராகவன் மேனி நோக்கித்
தீயெனக் கொடிய வீரச் சேவகச் செய்கை கண்டால்
நாயெனக் கருதும் அன்றே காமனும் நாமும் எல்லாம்''
6. 15. 30

இப்படிப்பட்ட உணர்வு பெற்றமையால்தான் இராமன் தனக்கு மேலான, நல்ல பகைவன் என்று போற்றுகிறான்,

'நாசம் வந்துற்றகாலை நல்லதோர் பகையைப் பெற்றேன்' என்று பேசுகிறான்.

பகைவன் புகழைப் போற்றுவதில் மட்டுமல்லாமல், பகைவனோ, நண்பனோ, அயலவனோ யார் கூறினாலும் நல்ல கருத்துக்கள் அறிவுரைகளை ஏற்புழி எடுத்துக் கொள்வதும் பண்பாகும்.

அப்படி எடுத்துக்கொள்ள வள்ளுவனும் அறிவுறுத்தினான் எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு''

பிறருடைய பண்பை, வீரத்தை, திறத்தைப் போற்றுவதுடன் ஏற்புடைக் கருத்துக்களையும் ஏற்றுக்கொள்வது சிறந்த அரசியல் திறன்.

கம்பன் அன்றே காட்டிய இப்பண்பு இன்று பலரும் விரும்பி ஏற்கத் தக்கதாக உள்ளது. மேடைகளில் அறிஞர் 'மாற்றான் தோட்டத்து மல்லிகையும் மணக்கும்' என்று கூறி வருவது இதன் அடிப்படையிலேதான் என்பதும் சிந்திக்கத்தக்கது,

# 12 வள்ளல் விடும் தூது

ஒரு நாட்டுக்கும் மற்ருெரு நாட்டுக்கும் போர் ஆரம்பிக்கும் முன் தூதர்களை அனுப்பிச்சமரசம் பேசுவது என்பது ஒரு போர் நெறி. கம்பன் தனது காவியத்தில் காவிய நாயகன் இராமபிரான் வாயிலாக, அங்கதன் தூது படலத்தில் இச்செந்நெறியைக் காட்டுகிருன்.

இன்றைய சர்வதேச அரசியல் இந்த அடிப்படைக் கருத்தை ஒத்துத்தான் அமைந்திருக்கிறது அன்ருே:

இராமன் தன் எழுபது வெள்ளம் வானரசேனைகளோடு விரைவாகச் சென்று இலங்கையின் வடக்கு வாசலை யடைந்தான், இராவணனை எதிர் நோக்கியிருந்தான். அவன் வரவில்லை என்றதும் இராமன் விபீஷணனைநோக்கி இராவணன் வராததன் நோக்கம் எனக்குத் தெளிவாகி விட்டது.

"தூதுவன் ஒருவன் தன்னை இவ்வழி விரைவில் தூண்டி
மாதினை விடுதீயோ?" என்று உணர்த்தவே, மறுக்கும்
ஆகின்
'காதுதல் கடன் என்று உள்ளம் கருதியது;
அறனும் அஃதே நீதியும் அஃதே'
—என்ருன் கருணையின் நிலயம் அன்ஞன்.

"ஒரு தூதனை இப்போது விரைவில் போகும்படி அனுப்பி வைப்போம். சீதாபிராட்டியை விடுதலை செய்யப் போகிருயா என்பதைக் கேட்போம். அதற்கு அவன் மறுப்பான் ஆயின், அந்தக் கள்வனை அழித்தலே கடமை என்று என்மனம் தெரிவிக்கிறது. அதுதான் அறமும், நீதியுமாகும்.'' இவ்வாறு சொன்னது கருணைக் கடலான இராமபிரான்,

கூடுமானுல் இராவணனையும் மன்னித்து காப்பாற்றலா மோ! என்று இராமனின் கருணை உள்ளம் கருதியது.

அதற்கு விபீஷணன் அது அழகான யோசனை என்றுன். சுக்ரீவனும் 'அரசர் பின்பற்ற வேண்டிய தர்மம் இது தானே' என்றுன் இலட்சுமணனே இதை ஒப்புக்கொள்ள வில்லை "இங்கே இரக்கத்துக்கோ, அனுதாபத்துக்கோ சிறிதும் இடமில்லை. இனிநாம் அம்பிஞல் பேசிக்கொள் வதைத் தவிர வேறுபேச்சுக்கிடமேது'' என்றுன்.

இராவணன் மீது ஒன்றன் மேல் ஒன்ருக குற்றச் சாட்டுகளைக் குறிப்பிடுகிருன் இலட்சுமணன்,

"நிகரற்ற ஒளியும் அழகும் வாய்ந்த பிராட்டியைத் துணிந்து சிறைப்படுத்தினுன். தேவர்களுக்கு இடுக்கண் செய்தான். வேதியர்க்கு ஆருத்துயரம் விளைத்தான். மக்களை அடித்துத் தின்பது போன்ற துன்பம் செய்தான் எட்டுத்திக்குகளில் உள்ள எல்லா உலகங்களையும் தானே ஆட்சி செலுத்தும் பொருட்டு மேலே சொன்ன அக்கிரமங் களைச் செய்தான். இந்திரனின் செல்வங்களையும் பறித்துக் கொண்டான். தனக்கென்று ஒரு நேர் வழி இல்லாது தவருன பாதைகளில் செல்ல லானுன்.

அன்று மாரீசனை மாயம் செய்யத்தூண்டி உன் தேவி யைப் பிரித்து வரம்பிலாத்துயரத்தில் உன்னை ஆழ்த்தி விட்டான்'' என இராமன்தேவியை அபகரித்ததை மீண்டும் வற்புறுத்தி இராமனை துரிதப் படுத்துகிருன்இலட்சுமணன்.

(இப்படிப் பட்டவனுக்கா நீ இரக்கம் காட்டுகிருய் என்பது இங்கு குறிப்பாகச் சொல்லப்படுகிறது,)

ஏழை பால் இரக்கம் நோக்கி, ஒருதனி இகல் மேல் சென்ற, ஊழி காண் கிற்கும் வாழ்நாள், உந்தையை உயிர் பண்டு உண்டான்''

"ஆதரவற்று அனாதைபோல் ஆகிவிட்ட சீதை மீது இரக்கம் கொண்டு சடாயு இராவணனோடு தனியாக ஒரு போராட்டமே நடத்திப் பார்த்தான். நீண்ட காலம் வாழ்ந்திருப்பான், ஆனால் அந்த பெரியப்பாவை அன்றே சங்கரனார் கொடுத்த வாளால் வெட்டி வீழ்த்தினான்.''

இப்பேர்ப்பட்டவன் சீதையை விட்டுவிட்டான் என்று அவனை உயிரோடிருக்க அனுமதிப்பாயானால் அண்ணா! நீ அன்று என்னுடைய பெயர் உள்ளளவும் இந்த இலங்கைச் செல்வம் உன்னுடையதே என்று விபீஷணனுக்கு அளித்த உறுதிமொழி என்னாவது? அடைக்கலம் என்று உன்னைச் சரணடைந்தவனுக்கு நீ அளித்த வாக்குறுதி என்னாகும்? சாதுக்களை இம்சிக்கும் அரக்கர்களை ஒழிப்பதாக முன்பு செய்த சபதம் தான் என்னாகும்? இவற்றையெல்லாம் நீ மறந்தாலும் இலங்கையின் வளமை கருதி அது அழிந்து போவது சரியல்ல என்று கருதினாலும் இனிசெய்ய வேண்டியது போர் ஒன்றே'' என்கிறான் இலட்சுமணன்.

"இவற்றையெல்லாம் நான் மறக்கவில்லையென்றாலும் அறிஞர்கள் வகுத்துள்ள நீதிமுறைகளைப் புறக்கணிக்கலாமா? புஜபல பராக்கிரமம் உடையவர்களும், பொறுமையாகவே செயற்பட வேண்டும். இதுதான் வெற்றிக்குரிய பண்பு, அறமும் அதுதான்'' என்று இவ்வாறு பொருந்தச் சொன்னான் இராமபிரான்.

''தூது போக வேண்டும்'' என்ற உடனே ஏற்கனவே அனுபவம் படைத்திருந்த அனுமனின் நினைவுதானே சாதாரணமாக வரக்கூடும். இங்கு இராஜதந்திரமும் பயன் படுகிறது. திரும்பத் திரும்ப ஒரே பேர் வழிதான் வந்து கொண்டிருக்கிறான் என்று எதிரி இதை ஒரு பலவீனமாக

நினைத்துவிடக் கூடாதல்லவா? ஆளுக்குப்பஞ்சமில்லை என்று மெய்ப்பிப்பதற்காக, அனுமனைத் தவிர வேறு யாரை அனுப்பலாம் என்ற யோசனை இராமபிரானுக்கு. போனாலும் எதிரிகளின் வலையில் சிக்கிக் கொள்ளாமல் தற்காப் பாவது செய்துகொண்டு மீள வேண்டுமே; அந்தச் சாமர்த் தியம் அங்கதனுக்கு உண்டு எனத் தீர்மானிக்கிறான்.

வாலிமகன் தந்தையின் இறுதி வேண்டுகோளுக்கிணங்க இராஜபக்தியோடு (இராம பக்தியோடு) செயற்படுகிறானா என்று பார்ப்பதற்கும் இதுஒரு வாய்ப்பாகப் பயன்படுகிறது

இராமன் எதிர்பார்த்தபடியே அங்கும் நடக்கிறது.

இராமன் அங்கதனை நோக்கி "நம்பி! நீ! எதிரியிடம் போய் இரண்டியில் ஒன்றைக் கேட்டு வா" என்றான்.

உடனே அங்கதன் தோள்கள் பூரித்து "நான் கேட்க வேண்டியது என்ன?" என்கிறான்.

"ஏந்திழை யாளை விட்டுத் தன்உயிர் பெறுதல் நன்றோ? அன்றுஎனின், தலைகள் பத்தும் சின்னபின்னங்கள் செய்ய செருக்களம் சேர்தல் நன்றோ? சொன்னவை இரண்டின் ஒன்றே துணிக!"

"அறத்துறை அன்று, வீரர்க்கு அழகும் அன்று, ஆண்மை அன்று,
மறத்துறை அன்று, சேமம் மறைந்துஉறைந்து ஒதுங்கி வாழ்தல்;
நிறத்து உறவாளி கோத்து, நேர் வந்து நிற்கும் ஆகின்,
புறத்து உற எதிரே வந்து போர் தரப்புகல்தி' என்றான்.

"இராவணன் மறுத்தால் அவ்வாறு நீ வர மறுப்பது அறம் ஆகாது. வீரர்களுக்கு, அழகும் அல்ல ஆண்களுக்குரிய தன்மை அன்று. புஜபல பராக்கிரமம் ஆகாது, நீ போருக்கு வராமல் பாதுகாப்பான இடம் தேடி மறைந்து வாழ்வது.

என்னுடைய பாணம் உன் மார்பின் எதிரே வந்து நிற்கும். எனவே மறைவிலிருந்து வெளி வந்து போர் புரிவதே நன்று'' என அவனிடம் சொல்லி விடு என்கிருன்.

உடனே அங்கதன் ''மாருதி அல்லன் ஆகின் நீ'' (மாருதிக்கு அடுத்த வீரன் அங்கதன் தான்) என்ற அளவுக்கு பெருமை பெற்றேன். எனக்கு இனி நிகர் யார் பெற முடியும் என்ற பூரிப்போடு இராவணன் இருப்பிடம் நோக்கி விரைகிருன் இராமபாணம் போல.

இராமன் எதிர்பார்த்தபடியே வாலி மகனைத் தன் கட்சியில் சேர்த்துக்கொள்ள முடியுமா என இராவணன் முயன்று பார்க்கிருன். அங்கதன் இராவணனை ஏளனச் சிரிப்புடன் நோக்குகிருன். 'வாய்க்கு வந்தபடியெல்லாம் உளறிக் கொட்டுகிருய். என்னை உன்பக்கம் இழுத்துக் கொள்ள பகீரதப் பிரயத்தனம் செய்கிருய். எனக்கு கிட்கிந்தை இராச்சியத்தில் ஆசை துளியாவது இருந்தால் தானே, அதற்கு உன் உதவியை நான் நாடப்போகிறேன் மிருக அரசனுகிய சிங்கம் தன் நோக்கத்திற்கு உதவியாக ஒரு நாயையோ நரியையோ தேர்ந்தெடுப்பது போலத் தான் உளது இது எனக் கடகடவென்று சிரிக்கிருன்.

இந்த வசைமொழி கேட்டதும் இராவணனுக்கு பொறுக்க முடியவில்லை. அவன் நால்வரை ஏவி இவனைப் பற்றிப்பிடியுங்கள் என்கிருன் அங்கதனே அந்தநால்வரோடு உயரக்கிளம்பி அவர்களை அப்படியே கைகால் முறியும்படி உதிர்த்துத்தள்ளிவிட்டு இராமதூதன் என்னும் தகுதிக் கேற்ப அறப்பெருநெறியைத் தழுவி இரக்கத்தோடு பேசுகிருன்.

*''ஏமம் சார, எளியவர் யாவரும்,*
*தூமம் கால்வன, வீரன் சுடு சரம்,*
*வேம் மின் போல் வன, வீழ்வதன் முன்னமே,*
*போ மின் போமின், புறத்து''* —என்று போயினன்.

புகையினைக் கக்கிக் கொண்டு, மின்னல் போல வந்து இராமபிரானின் கொடிய அம்புகள் இங்கே விழுவதற்கு முன்னம் பாதுகாப்பான இடம் தேடி எளியவர்கள் அப்பால் போய்விடலாம் என்கிறான் அங்கதன்

இலட்சுமணன் தூது செல்வதையே தடுத்து இராவணனைக் கொல்வதுதான் முறை என்றான். ஆனால் இராமனோ இராவணனைப்பற்றி நன்கு அறிந்திருந்த போதிலும் போர் அறமுறைகளை நாம் கடைப்பிடிக்க வேண்டும் என்ற நோக்கத்தில் "தூது அனுப்பிச் சமரசம் பேச வேண்டும்" அதை மறுத்தால்தான் அவனைப் போரில் சந்திக்க வேண்டும் இதுதான் யுத்ததர்மம் என்று எடுத்துரைக்கிறான்.

இன்று :

"போருக்கு முன் தூது அனுப்பிச் சமரசம் பேச வேண்டும் என்று கம்பன் அன்று காட்டிய இக்கொள்கை இன்றும் கடைப்பிடிக்கப்படுகிறது. இக்கொள்கை, முடியுமானால் போரால் ஏற்படும் மக்கள் அழிவினை, பொருட் சேதத்தை தடுக்கலாமே என்ற நல்லெண்ணத்தில்தான்.

கம்பன் காட்டும் இக்கொள்கை முற்காலத்துக்கு மட்டும் என்ன எக்காலத்துக்கும் பொருத்தமான ஒன்று தான்.

# 13 நிராயுதன் மீது பரிவு

உலக அரங்கில் யுத்ததர்மம் என்று இன்று கடைப் பிடிக்கப்படும் அறப்போர் நெறியில் பகைவன் நிராயுத பாணியாக நிற்கும் சந்தர்ப்பத்தில் அவனைக் கொல்லக் கூடாது. இக்கொள்கையைக் கம்பன் அன்றே இராமபிரான் வாயிலாக இராவணன் முதற்போர் புரி படலத்தில் விளக்கு கிறான்.

அன்று·

இராவணன் மணிமுடி துறந்தான் என்று வாயால் சொல்லும் நேரத்திற்குள்ளே அந்த நிகழ்ச்சி நடந்து விட்டது.

சந்திரன் இல்லாத இரவைப் போலவும், சூரியன் இல்லாதப் பகலைப் போலவும் ஆகிவிட்டது இராவணன் நிலைமை. இதுவரை அவன் செய்த போர்களிலெல்லாம் வெற்றியடைவான் அல்லது போர் முடியாது இடையே நின்றிருக்கும்; தோல்வி என்பதையே அவன் கண்டதில்லை யாம். அப்படிப்பட்ட இராவணன் இன்று தன்னுடைய மணிமுடிகளை இழந்து நிற்கின்றான்.

“ *அறம் கடந்தவர் செயல் இது என்று, உலகு எலாம் ஆர்ப்ப*
*நிறம் கரிந்திட, நிலம் விரல் கிளைத்திட, நின்றான்—*
*இறங்கு கண்ணினன், எல் அழி முகத்தினன், தலையன்,*
*வெறுங்கை நாற்றினன், விழுதுடை ஆள் அன்ன மெய்யன்* ”

அறம் மீறியவரின் செயல் திறன் இவ்வளவு தான் என்று உலகம் முழங்கவும், ஏற்கனவே கருநிறமுள்ளவன் மேலும் கரியனாகத் தோற்றமளிக்கவும், நாணத்தால் கால்

விரல்கள் நிலத்தில் கோலம் போடவும், களையிழந்து நின்றான். அவனது பரிதாப நிலை மேலும் வர்ணிக்கப் படுகிறது.

கண்கள் நிமிர்ந்த பார்வையை இழந்து கீழ் நோக்கு கின்றன. ஒளி அழிந்து காண்கிறது அவன் முகங்கள்' தலைகள் தொங்கிப் போய்விட்டன. வெறுமனே கைகளைத் தொங்க விட்டுக் கொண்டிருக்கிறான், ஆலம் விழுது போலே.

இப்பேர்பட்டவனுடைய நிலைமையை நோக்கிய இராமபிரான், நிராயுதபாணி என்பதால் கொல்ல நினைத்தாவில்லை.

"நின்றவன் நிலை நோக்கிய நெடுந்தகை, இவனைக்
கொன்றல் உன்னிலன். 'வெறுங்கை நின்றான்' எனக்
கொள்ளா'
இன்று அவிந்தது போலும், உன்தீமை' என்று"

"இன்றோடு உன் தீமை அடங்கி விட்டது போலும்" என்று தன் பேராண்மைப் புகழ் தோன்ற இராமன் பின் வருமாறு பேசத் தொடங்கினான்.

"அறத்தினால் அன்றி, அமரர்க்கும் அருஞ்சமம் நடத்தல்
மறத்தினால் அரிது என்பது மனத்திடை வலித்தி;
புறத்தி, நின்நெடும் பதிபுகக் கிளையொடும்; பாவி!
இறத்தி; யான்அது நினைக்கிலென். தனிமை கண்டு
இரங்கி'

நித்திய வாழ்வுடைய தேவர்களும் பராக்கிரமத்தினால் மட்டும் வெற்றி பெற முடியாது. அவர்களுக்கும் அறம் தான் கைகோத்து உதவவேண்டும். இதை மனத்தில் உறுதிபடுத்திக் கொள்வாயாக. நீ விரைவாகச் சென்று உன்னுடைய சுற்றத்தாரை அடைவாய். அப்படிச் செய்யா

விட்டால் பாவி நீ இறந்து விடுவாய். அது குறித்து இப்போது நான் நினைக்கவில்லை. காரணம் நிராயுதபாணி யான உன்னுடைய தனிமை நிலைதான்.

"உடைப்பெருங்குலத்தினரொடும், உறவொடும் உதவும் படைக்கலங்களும், மற்றும் நீ தேடிய பலவும் அடைத்து வைத்தன திறந்து கொண்டு ஆற்றுதி ஆயின், கிடைத்தி; அல்லையேல், ஒளித்தியால்; சிறுதொழில் கிலோய்!'' சிறு தொழில் புரியும் கீழோனே, உன்னுடைய பெருங்குலத்தின ரையும், உறவினர்களையும், உனக்கு உதவி செய்யும் படைக் கலங்களையும், மேலும் நீ தேடி வைத்திருக்கும் பல வர பலங்களையும், இதுவரை நீ சேமித்து வைத்திருக்கும் பல் வகைச் சக்திகளையும் கொண்டு போருக்கு வருவதென்றால் வா.

அதற்கு உன் மனம் இசையவில்லையென்றால் எங்காயா வது ஓடி ஒளிந்து கொள்.

இதுவரை நிராயுதபாணி என்று கருணை காட்டிய இராமன் இனி இராவணன் தப்பிப் பிழைப்பதற்கும் வழி சொல்லுகிறான்.

நீ, சிறையில் வைத்திருக்கும் சீதாப்பிராட்டியை விடு வித்துத் தேவர்களை உரிய இடத்தில் வைத்து, உன் தம்பி விபீஷணனை இராட்சச சக்கரவர்த்தி என்ற முதல் இடத் தில் வைத்து, நீ அவனுக்கு பணி செய்து வரவேண்டும். அப்படியானால் நீ தப்பிப் பிழைக்கலாம். அதற்கு இணங்க மறுத்தால் உன் தலைகள் என் அம்புகளால் துண்டிக்கப் படும்.

"இதற்கு மனமின்றேல், மீண்டும் போருக்குவா. உனக்குள்ள எல்லா சக்திகளையும் கொண்டு நின்று பார்''

அப்படி நேருக்கு நேர்நின்று போராடி அழிந்து போனா லும், நீ நல்லதொரு வீரனாகக் கருதப்படுவாய். வேறு

பிழைக்கும் வழி இருப்பதாக மனக் கோட்டை கட்ட வேண்டாம் "ஆளையாவுனக்கு அமைந்தன மாருதம் அறைந்த பூளை ஆயின கண்டனை; இன்றுபோய், போர்க்கு நாளை வா" என நல்கினன் — நாகு இளங்குமுகின் வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல்"

நீ எந்தப் படைகளை நம்பி உன் ஆட்சியை நடத்து கிருயோ அந்தப் படைகள் இப்போது எங்கே? சண்டை மாருதத்தில், பூளைப்பூ படும் பாடு பட்டு மறைந்தன அல்லவா ?.

"இன்று போய் போருக்கு நாளை வா"
என்கிருன் இராமன்,

சமாதானம் என்ருல் இப்போதே இங்கேயே செய்து கொள் என்பது குறிப்பு.

அதற்கு எண்ணம் இல்லையென்ருல் இன்று போய் ஓய் வெடுத்துக் கொண்டு உன்னுடைய சக்திகளையெல்லாம் ஒருங்கே திரட்டிக் கொண்டு போருக்கு நாளைவா என் கிருன்.

இது இராமனின் பேராண்மையைக் குறிக்கிறது.

இன்று :

போர்க் களத்தில் நிராயுதனைக் கொல்லுதல் கூடாது என்று கம்பன் காட்டும் இந்தக் கொள்கை இன்றும் கடை பிடிக்கப்படுகிறது. இந்தக் கொள்கை எக்காலத்துக்கும் பொருத்தமானது என்று அறுதியிட்டுச் சொல்லலாம். இதைக் கடைப்பிடிக்கவில்லை எனில் அது அறப்போர் ஆகாது. மனிதாபிமானம் ஆகாது. இராம இராவணப் போர் முற்றிலும் அறப்போர். ஆனல் கௌரவர் பாண்டவர்போரோ வஞ்சனைப்போர். போர் பொல்லாதது அதிலும் அறம் கடைப்பிடிப்பது நன்று.

# 14 இளைஞர்களுக்கு அறிவுரை

இளைஞர்கள் எக்காலத்திலும் முதியவர்களின் ஆசிக்கும், தக்கோரின் அறிவுரைக்கும் உரியர், ஆவார்.

உதாரணமாக இலட்சுமணன் எவ்வளவோ அறிவாளியாக இருந்தும், இராமனின் அடிச்சுவடுகளைப் பின்பற்றி உண்மை வாழ்க்கை நடத்திவந்தபோதிலும் இராமன் அவனுக்கு அறிவுரைகளையும், அறவுரைகளையும் வழங்கிய வண்ணமாயிருக்கிறான். தன் தம்பி என்ற உரிமையால் ஆணவம் கொண்டிருக்கக்கூடுமோ என்று கூட எண்ணியவனாய், பரதனைச் சுட்டிக்காட்டி இடித்து அறிவுறுத்துகிறான்.

பரதன், இராமனின் பிரிவைத் தாங்க முடியாமல் அலறியடித்துக் கொண்டு வருகிறான். அவலம் இது என்று சித்தரித்துக் காட்டுவது போல் தோற்றமளித்த அவனை இராமன், தம்பி இலட்சுமணனுக்குச் சுட்டிக் காட்டுகிறான்

ஏனென்றால், இந்த இலட்சுமணன்; பரதன் போர்க்கோலம் பூண்டு வருகிறான், என எச்சரித்தான் அல்லவா? தொழுகையும். அழுகையுமாய்த் துவண்ட மேனியனாய், வருகிற பரதனை முழுதும் உணர்ந்து கொண்ட இராமபிரான் இலட்சுமணனிடம், ''பரதனின் போர்க் கோலத்தைப்பார்த்தாயா'' என்கிறான்.

''எல் ஒடுங்கிய முகத்து இளவல் நின்றனன்—
மல் ஒடுங்கிய புயத்தவனை வைது எழும்
சொல் லொடும் சினத்தோடும் உணர்வுசோர்தர,
வில்லொடும் கண்ண நீர் நிலத்து வீழவே'' இளவலும்

நிற்கிறான்.

இலட்சுமணனுக்கு சூடு போட்டதுபோல் அவ்வளவு கடுமையாகப் பரிகாசக்குரலில் இராமன் காட்டியதை இவனால் [மறக்கமுடியவில்லை. ஏற்கனவே இராமனுக்கு முழுக்க முழுக்க அடங்கி ஒடுங்கி நடப்பவன் தான். தன்னைத்தம்பி என்று கூட சொல்லிக்கொள்ளாமல் தன்னை இராகவனின் பணியாளன் என்றே பிறரிடம் அறிமுகப் படுத்திக் கொள்பவன். இந்த இளைஞனை தம்பி இராமனுடைய அறிவுரையை என்றும் மறக்காதவனாய்த் தன் உள்ளத்துள்ளே நேர்மையோடு நினைவு கூர்ந்து இருந்தான் என்று சொல்லவும் வேண்டுமோ?

"வாய்தந்தன கூறுதியோ மறைதந்த நாவால்" என்று வேறு ஓர் இடத்தில் தம்பியை எச்சரிக்கிறான் இராமன். அவசரத்தால் ஆராய்ந்து அறியாமல் ஒரு செயலைச் செய்ய. அல்லது பேசமுனைபவர்களுக்கு இது ஒரு அறிவுரையாக வழங்கப்படுகிறது.

## விபீஷணன் மூலமாக இளைஞர்களுக்கு அறிவுரை

இராமனைப் பின்பற்றி ஒழுகும் விபீஷணனை சிற்றப்பா என்றுகூடச் சிறிதும் மதிக்காமல் மிகவும் இழிவாகப் பேசுகிறான் இந்திரசித்து. அரசனுக்கு உண்மை ஊழியன் எப்படியிருப்பான் என்பதற்கு ஓர் உவமைக்கதையும் சொல்கிறான்.

*நீர்உளதனையும் உள்ள மீன்என நிருதர் எல்லாம்*
*வேர் உளதனையும் விவர்; இராவணனோடு; மீளார்;*
*ஊர் உளது; ஒருவன் நின்றாய் நீ உளை? உறைய;நின்னொடு*
*ஆர் உளர் அரக்கர் நிற்பார், அரசி வீற்றிருக்க? ஐயா?*

நீரில் மீன்களும் இருக்கின்றன. நீர் வாழ் பறவைகளும் இருக்கின்றன. நீர் வற்றி வறண்டதும் மீன்கள் மடிந்து போகின்றன. ஆனால் நீர் வாழ்ப் பறவைகள் தப்பிப்போய் தண்ணீர் உள்ள வேறு இடங்களை அடைந்து விடுகின்றன.

அந்த மீன்களைப் போல் அரக்கர்கள் எல்லோரும் இராவணனுக்காக வேரொடு வம்ச நாசமாவார்கள். இராவணனை விட்டுத் தங்களை மட்டும் காப்பாற்றிக் கொண்டு ஓடி விடமாட்டார்கள்.

இலங்கை ஊர்மட்டும் மக்களில்லாமல் இருக்கும். அந்த ஊரில் அரக்கர்களாய் உள்ளவர்களில் நீ ஒருவன் தான் தனித்து நிற்பாய். உன்னோடு சகவாசிகளாய் யார் தாம் நிற்கப் போகிறார்கள்? இதற்கு மேலும் உன்பேராசை இழுத்துச் செல்ல நீ அரசனாகவும், கொலுவிருக்க விரும்பு கிறாய். ஒரு சுடுகாட்டில் அல்லது இடுகாட்டிலா உன் சிங்காதனத்தை நிர்மாணிக்கப் போகிறாய்,

இந்திரசித்தின் உரையைக் கேட்ட வீடணன் கூறு வதைப் பாருங்கள்.

''வெவ்விது பாவம்; சாலத் தருமமே
விழுமிது''

ஐயா! பாவச் செயல் மிகவும் கொடியது. தருமமே சாலச் சிறந்தது. எனவே நீ என்னுடைய அறிவுரை கேட்பாயாக என்று சொல்ல ஆரம்பிக்கிறான்.

அறம் துணை ஆவது அல்லால், அருநரகு அமைய நல்கும்
மறம் துணைஆக மாயாப் பழியொடும் வாழ மாட்டேன்;
துறந்திலேன் மெய்ம்மை, எய்தும் பொய்ம்மையே துறப்பது
அல்லால்:
பிறந்திலேன் இலங்கை வேந்தன் பின்னவன் பிழைத்தபோதே.

அரசியலில் அறவியலாக இருந்தால்தான் அதற்கு துணை போவேன், அதை விடுத்துக் கொடுந்துன்பம் தரும் மறத்துக்குத் துணையாகப் போய்த் தீராத பழியோடு வாழ மாட்டேன்.

நான் அரசனைத் துறந்தேன், அண்ணனைத் துறந்தேன் என்கிறாய், பொய்மையைத்தானே துறந்தேன். அது அண்ணனாயிருந்தாலென்ன? அரசன் வடிவிலிருந்தாலென்ன உண்மையைத் துறக்கவில்லையே? அவன் சீதையைத் திருடி வந்து, சமுதாயத்துரோகம் செய்தபோதே அவனைத்துறந்து விட்டேன். எனினும் திருத்த முடியுமா? என்று முயற்சிகளெல்லாம் செய்து பார்த்தேன்.

உண்டிலென் நறவம்; பொய்ம்மை உரைத்திலென்; வலியால்
ஒன்றும்
கொண்டிலென்; மாய வஞ்சம் குறித்திலென்; யாரும் குற்றம்
ஒன்றும்
கண்டிலர் என்பால்; உண்டே நீயிரும் காண்டிர் அன்றே!
பெண்டிரின் திறம்பி னாரைத் துறந்தது பிழையிற்று ஆமே?

இதற்காகவே என் வாழ்க்கையைப் பக்குவப்படுத்திக் கொண்டேன். கள் குடிப்பதில்லை. பொய் சொல்வதில்லை. வலிமையே உரிமை என்ற கொள்கையோடு ஒன்றையும் அபகரித்துக் கொண்டதில்லை. மாயவஞ்சனைச் செயல்களைச் சற்றும் மேற்கொள்ளவில்லை. யாராவது என்மீது ஒரு குற்றம் சொல்ல முடியுமா? அப்படியிருந்தால் நீயே சொல்லலாமே? பிறர் தாரத்தை அபகரிப்பவர்களை விட்டு விலகியது குற்றமாகுமா? உன்தந்தையின் இந்தச் செயலைக் கண்டித்தேன். அதற்காக என்னை விரட்டியடித்தான். அதனால் வந்தேன். அதற்காக நான் நரகத்திற்கு போய் விடுவேனா என்ன?

செம்மையான மேலோர்கள் பின்பற்றுகிற அறத்தைப் பின்பற்றி வாழும் எனக்கு நரகமே கிடைக்கட்டும். கொடுமையான தருமத்தைச் சிந்திக்காத, விரும்பியதையே விருபபிச் சாகும் உங்களுக்கு புகழும், சொர்க்கமும் கிடைக்கட்டும்.

அப்படியே ஆவதாயினும் "தருமத்தினைப் பாவம் வெல்லாது"

"அறத்தினைப் பாவம் வெல்லாது" என்னும் அது அறிந்து "ஞானத் திறத்தினும் உறும்" என்று எண்ணி தேவரிக்கும் தேவைச் சேர்த்தேன்;

*"புறத்தினில் புகழை ஆக; பழியொடும் புணர்க; போகச்*
*சிறப்பு இனிப்பெறுக; தீர்க' என்றனன், சீற்றம் தீர்ந்தான்"*

எனவே 'தேவ தேவனாகிய இராமனை அடைந்தேன்' அது வெளியுலகில் புகழாக மதிக்கப்பட்டாலும் சரி பழியோடு சேர்த்து பேசுவதாயினும் சரி, அதனால் நான் சிறப்புப் பெற்றாலும் சரி, அது இல்லாமற் போனாலும் சரி" என்று கோபமே இல்லாத விபீஷணன் மேலே சொன்னவாறு ஆவேசமாய்ப் பேசுகிறான்.

விபீஷணனுடைய இந்த வாழ்க்கை, வார்த்தை சிறப்பாக இளைஞர்களுக்கும் பொதுவாக, மற்றவர்களுக்கும் ஒரு சிறந்த அறிவுப் பேருரையாகும்,

# 15. மக்களாட்சியின் மாண்பு

மக்களாட்சியின் உயர்வு அயோத்தியிலும், சர்வாதிகார ஆட்சியின் தாழ்வை இலங்கையிலும் அடுத்தடுத்துக்காட்டி இன்றைய அரசியலில் ஒரு விழிப்புணர்ச்சி ஏற்படுத்த உதவுகிறான் கம்பன்.

அடக்குமுறை வல்லரசு இலங்கையிலும், மக்கள் ஆட்சியின் மாட்சி அயோத்தியிலும் காணப்படுகின்றன.

மக்கள் ஆட்சியின் மாட்சி :

அயோத்தியில் மக்களாட்சி எப்படி நடந்தது என்பதற்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டு தசரதன் மந்திரப் படலம். இராமனுக்கு முடிசூட்ட வேண்டும் என்ற எண்ணம் தசரதனுக்குத் தோன்றுகிறது. மந்திராலோசனை மண்டபத்தை அடைகிறான்.

*"புக்கபின், நிருபரும் பொருஇல் சுற்றமும்,*
*பக்கமும், பெயர்க என, பரிவின் நீக்கினான்;*
*ஒக்க நின்று உலகு அளித்து, யோகின் எய்திய*
*சக்கரத்தவன் எனத் தமியன் ஆயினான்"*

அங்கே வழக்கம் போல் சிற்றரசர்களும், ஒப்பற்ற சுற்றத்தார்களும், நிர்வாக அதிகாரிகளும் இருந்தார்கள். அவர்களைத் தசரதன் தன் பண்பாடு தோன்ற நீங்கள் தயவுசெய்து போய் வாருங்கள் என்கிறான். தன் மந்திரி மார்களை அழைத்துவர ஆணையிடுகிறான் தசரதன்.

*இந்திரற்கு இமையவர் குருவை ஏய்ந்த, தன்*
*மந்திரக் கிழவரை, வருக என்று ஏவினான்.*

அதோடு தன் மந்திரக்கிழவரான வசிட்டரையும் அழைத்து வருக என்று ஆணையிடுகிறான்-

அப்போது மந்திரிமார் வருவதற்கு முன் ஒரு கணம் தனிமையாக இருக்க நேரிடுகிறது. இந்த நிலையிலும் மக்களுடைய சேம லாபங்களைப் பற்றிய கவலையே தசரதனுக்கு.

மறுகணம் மந்திரிமார்கள் வரத்தொடங்குகிறார்கள். அவர்களின் தொகை அறுபதினாயிரம் என்று கவிஞன் குறித்துள்ளான், (அவர்கள்) தொகை அறுபதினாயிரம் என்றாலும் உணர்வு ஒன்றே என்கிறான் கவிஞன்.

தசரதன் தன் மந்திரலோசனை மண்டபத்தில் மந்திரிமார்களை மட்டும் வைத்து ஆலோசனை நடத்துகிறான். ஆனால் இராவணன் மந்திராலோசனை மண்டபத்தைப் பாருங்கள்.

*வரம்பு அறுசுற்றமும், மந்திரத்தொழில்*
*நிரம்பிய முதியரும், சேனைநீள்கடல்*
*தரம் பெறுதலைவரும், தழுவத்தோன்றினான்*
*அரம்பையர் கவரியோடு ஆடும் தாரினான்.*

பெருந்தொகையினரான சுற்றத்தாரும், மந்திராலோசனையில் வல்லவரான முதியவர்களும், தர வாரியான படைத்தலைவர்களும் நெருங்கி ஆலோசனை செய்யுமாறு இராவணன் வீற்றிருக்கிறான்.

*"முனைவரும், தேவரும், மற்றும் உற்றுளோர்*
*எனைவரும், தவிர்க!' என ஏய ஆணையான்,*
*புனைகுழல் மகளிரோடு இளைஞர் போக்கினான்*
*நினைவுறு காரியம் நிகழ்த்தும் நெஞ்சினான்"*

தேவ ஸிரேஷ்டர்களேயும் (அவர்கள் அடிமைகள் தாம் எனினும் அவர்களேயும் விலக்குகிருன்) மற்று அவர்களே, போன்றவர்களேயும், பெண்களேயும், இளைஞர்களேயும் போக்கிஞன், தான் நினேத்த காரியத்தையே செய்யும் பிடிவாதக் குணமுடைய இராவணன்.

"பண்டிதர், பழையவர், கிழவர், பண்பினர்,
தண்டல் இல்மந்திரத் தலேவர், சார்க!' எனக்
கொண்டு உடன் இருந்தனன்—கொற்றஆணையால்
வண்டொடு காலேயும் வரவு மாற்றிஞன்"

பண்டிதர்கள், முதியவர்கள், பழமையானவர்கள், பண்புடையவர்கள், யாதொரு குறைவுமிலாத மந்திரிமார் கள் இவர்களேயெல்லாம் அருகில் வருக என்று உடன் கொண்டு இருந்தான். மந்திரலோசனே மண்டபத்தினுள் காற்று கூட உள்ளே வரமுடியாதவாறு தடுத்துவிட்டான்.

ஆன்று அமைகேள்வியர் எனினும், ஆண்தொழிற்கு
ஏன்றவர் நண்பினர் எனினும், யாரையும்,
வான் துணைச் சுற்றத்து மக்கள் தம்பியர்
போன்றவர் அல்லரை புறத்துப் போக்கிஞன்,

விரிந்துபரந்த கல்விகேள்விகளே உடையவர்களாயினும், ஆண்மையுள்ளவர் நண்பர்களாயினும், மற்று இவர்களே யொத்த அனேவரையும் தன்னுடன் வைத்துக் கொள்ள வில்லே. தனக்கும், தன்னுடைய தம்பி, மக்கள் ஆகியோ ருக்கும் நெருங்கிய தொடர்புடையவர்களே மட்டும் தன் னுடைய மந்திராலோசனே மண்டபத்தில் வைத்துக் கொண்டான். தன்னுடைய கருத்துக்குத் தலேயாட்டும் தம்பிரான்களேத் தவிர மற்றவர்களே வெளியேற்றி விட்டான்.

இலங்கையில் நடைபெறும் அரசை வல்லரசு என்று சொன்னால் போதாது, கொல்லரசு என்றே குறிப்பிட வேண்டும். இதற்குப் பின்வரும் பாட்டே தக்கசான்றாகும். இராவணன் உத்திரவு கொடுக்கிறான். அது சரியா என்று அப்போர் வீரர்கள் ஆராயக்கூடாது. அவர்கள் மந்தை மந்தையாக போருக்கு போய்க் கொண்டிருக்கிறார்கள்.

*எஞ்சல் அக்கணத்து அறிந்திலம்; இராவணன் ஏவ*
*நஞ்சம் உண்டவராம் என அனுமன்மேல் நடந்தார்;*
*துஞ்சினார் அல்லது யாவரும் மறத்தொடும் தொலைவுற்று*
*அஞ்சினார் இல்லை; அரக்கரின் வீரர் மற்று யாரே*

இந்தப் பாட்டில் போரிலே கையாளப்படும் தந்திரம் ஒன்று சுட்டிக் காட்டப்படுகிறது. எதிரிக்கு நம் படைகள் குறைவுபடுவது தெரியக்கூடாது- அதற்காக இறந்த பிணங்களை எதிரியின் கண்ணுக்குத் தெரியாமல் மறைத்து விடவேண்டும், கடைசியாக எல்லோரும் மாண்டபின்பு தான் படுதோல்வி ஏற்பட்டதென்று தெரியவரும்.

இதனால் இலங்கையில் நடக்கும் ஆட்சி அயோத்தியில் நடைபெறும் மக்களாட்சிக்கு முற்றும் முரண்பட்டது என்பது தெளிவாகிறது.

இன்று :

வரலாற்று போக்கில் இந்த உண்மையை நாம்இன்றும் காணலாம். நெப்போலியன் போன்ற அசுர சக்திகள் பிரதாபலங்கேஸ்வரனுடைய போர்த் தந்திரங்களையே கையாண்டுள்ளன. நல்லரசாகப் பணிபுரியாமல் அவனைப் போன்றே கொல்லரசாகவே ஆட்சிபுரிந்தன. அந்தக் கொல்லரசுகளின் அழிவு இன்றைய அரசுகளுக்கு ஒரு விழிப்புணர்ச்சி ஏற்படுத்தியுள்ளது என்றால் அது உண்மை தான்.

# 16. பரிவும் பணிவும்

இன்றைய புலவர் பெருமக்களுக்குக் கவி மரபு என்ற அமைப்பைக் கம்பன் அன்றே கம்பராமாயண முகப்புப் பாடல்களில் காட்டியுள்ளான். ஒன்பது முகப்பு பாடல் களில் ஐந்தில் கவி மரபுகளைக் குறிப்பிடுகிறான் எனலாம்

பண்டிதர்களும், காலட்சேபக்காரர்களும் இம் மரபு களைச் சுவையாகக் கதை வடிவத்தில் விரிவாகக் கூறுவர்.

ஓசை பெற்று உயர் பாற்கடலை உற்று, ஒரு
பூசை, முற்றவும் நக்குபு புக்கென,
ஆசை பற்றி அன்றய லுற்றேன்—மற்று, இக்
காசுஇல் கொற்றத்து இராமன் கதை அரோ!

ஒரு கிராமத்தில் பூனை ஒன்று நடமாடிக் கொண்டிருக் கிறது. முதல் முதல் அதற்குப் பால்ஏராளமாகக் கிடைத்து வந்தது. காரணம் பெண்களின் அஜாக்கிரதைதான். பூனையின் செயலை அறிந்த அவர்கள், இனி நாம் ஜாக்கிரதை யாக இருப்போம் எனத் தீர்மானித்தார்கள். பூனைக்கு ஒரு சொட்டுப் பாலும் கிடைக்கவில்லை அது ஒரே பால் வெறியில் அங்கும் இங்கும் உலாவிக் கொண்டிருந்தது. சுரவேகத்தில் ஜன்னி கண்டது போன்ற நிலையை அடைந்தது.

பாலின் ஆசையால் எப்படியாவது, எங்கேயாவது பாலைக் கண்டால் — அது பாற்கடலேயானாலும் அப்படியே நாக்கால் நக்கி உறிஞ்சி விடவேண்டும் என எண்ணியது. இப்படியிருக்க, இக்கதையில், இந்தக் கட்டத்திலே ஒரு பாற்கடலே தோன்றுகிறதாம். அதில் இறங்கிப் .பாலைக்

குடிப்பதென்றால் முடியுமா? அலைகள் மலைபோல புரண்டு புரண்டு வருகின்றன. கடலோரத்திலுள்ள ஒரு செங்குத்தானபாறையில் பூனை இருந்துகொண்டு பாற்கடலை நோக்குகிறது. எப்படியிறங்கிப் பாலைக் குடிப்பது? அலைகளில் மூழ்கிப் போய்விட்டால் என் செய்வது? நாவில் தெறித்த திவலையைச் சுவைத்து மகிழ்ந்த இந்த பூனை படும் அவஸ்தையில் நானிருக்கிறேன்! என்பது கம்பன் மனநிலை.

அவன் சங்கற்பம் செய்து எழுத முயன்ற மாகாவியப் போக்கோ சாதாரணமானதன்று; வடமொழியிலும், தமிழிலும் உள்ள ஆதார நூல்களையெல்லாம் ஆராய்ந்தான் முக்கியமாக வால்மீகி இராமாயணத்தை வல்லார் வாயிலாகப் பாடங் கேட்டான். அதன் இசைப்பண்பு கம்பனின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. இதை அப்படியே தமிழர்களுக்கு பொழிந்துவிட வேண்டுமே என்ற ஆசை பேராசை ஆயிற்று. இதைத்தான் "ஆசை பற்றி அறையலுற்றேன்" என்கிறான். இந்த ஆசையை மேலும் தூண்டி வளர்த்தவர் சடையப்ப வள்ளல்.

ஆரம்பத்தில் கம்பனுக்கும் தன் கவித்வசக்தி போதுமா என்ற மலைப்பு ஏற்பட்டிருக்க வேண்டும், என்பது தெளிவு. அனுமனது சக்தியை அவனது தோழர்கள் கூறிய பின்பே அறிந்து அனுமன் கடல் தாவினான் என்பது இராமயணக் கதை. அப்படியே சடையன் தூண்டுதலும் கம்பனுக்கு ஒருபுதிய நம்பிக்கையையும், உற்சாகத்தையும், ஊக்கத்தையும் அளித்திருக்க வேண்டும். போகப் போக ஆவேசமாய் மெய்ம்மறந் கவிதானுவபத்தில் மூழ்கிப் போனான் சாப்பாடுகூட முக்கியமாகத் தோன்றவில்லை. ஏன் பசி தாகம் தெரியவில்லை. கவிதை பாடுவதிலேயே கண்ணும் கருத்துமாயிருந்தான்.

"நொய்தின் நொய்ய சொல் நூல்களுற்றேன்—எனே!
வைதவைவின் மராமரம் ஏழ்துளே
எய்த எய்தவற்கு எய்திய மாக்கதை
செய்த செய்தவன் சொல் நின்ற தேயத்தே"

இப்பாட்டிலே ஆரம்ப காலக் கம்பன் மனப்பான்மையைக் காண்கிறோம்.

"எனக்கு வரும் சொற்கள் இக்கதை சொல்லப்போதுமான ஆற்றல் பெற்றவையாகத் தோன்றவில்லை. அச்சொற்கள் அற்பத்திலும் அற்பமானவையாகதி தோன்றுகின்றன எனக்கு. எப்படியிந்த நூல் உருவாகப் போகிறதோ இராமபிரானுக்கே வெளிச்சம்" என்கிறான்.

இராமபிரான், தான் ஒரு சகோதரனாகக் கொண்ட சுக்ரீவனுக்கு ஏற்பட்ட சந்தேகத்தைப் போக்குவதற்கு ஏழு மராமரங்களை ஒரே அம்பால் துளைத்துக் காட்டினான் அல்லவா? ரிஷிகளின் சாபம் எப்படி பலிக்குமோ அப்படியே ஒரே இராமபாணம் பாய்ந்து மராமரம் ஏழினையும்துளைத்தது இப்படிப்பட்ட மகாபராக்கிரமசாலியாகிய இராமனின் பெருங்கதை வால்மீகி முனிவனின் நூல் வடிவில் நிலை பெற்றிருக்கும் இத்தமிழ்நாட்டிலே நானாவது இராமாயணம் பாடுவதாவது என்ற அச்ச உணர்வு நீங்கிப் படிப்படியாக கம்பனுக்கு ஊக்கம் பிறக்கிறது.

"மந்த மந்த நடந்தது வாடையே" என்பது போலே, முன் வாசற் சோலையான பால காண்டத்திலேயே சோர்வு அறவே நீங்கி விடுகிறது.

"வையம் என்னை இகழவும், மாசு எனக்கு
எயதவும், இது இயம்புவது யாது எனின், —
பொய் இல் கேள்விப் புலமையினோர் புகல்
தெய்வ மாக் கவி மாட்சி தெரிக்கவே.

இந்த உலகம் என்னை இகழ்ந்து பேசவும், என்னைப் பற்றிக் குற்றம் கூறவும் நேரிடுமே என்றாலும் சொல்லித் தான் ஆகவேண்டும் ஏன்? வால்மீகியின் அற்புதகானமான தெய்வமாக்கவியை நான் அனுபவிப்பதுபோல் வடமொழி தெரியாத தமிழ் மக்களும், இரசிகப் பெருமக்களும் அனுபவிக்க வேண்டுமல்லவா? காக்காய்ப் பொன் அசல் தங்கத்தை எடுத்துக் காட்டுவது போல்வது வால்மீகி கவிதையின் பெருமையை நான் எடுத்துக்காட்டுவது என்கிறான்.

''துறை அடுத்த விருத்தத் தொகை கவிக்கு
உறை அடுத்த செவிகளுக்கு ஓதில், யாழ்
நறை அடுத்த அசுண நன் மாச் செவி
பறை அடுத்தது போலும் — என் பாஅரோ''

பல்வேறு துறைகளையுடைய விருத்தபாக்களின் வேறு பாடுகளால் கதையைச் சிறப்பாகச் சோடித்துக் காட்டத் திட்டமிடுகிறான். இரசிகர்களுடைய செவியே கவிதைக்குக் காப்பாக அமைகிறது. அந்தப் பண்பட்ட செவிகளைப் புண் படுமாறு செய்ய எனக்கு உரிமையுண்டா? அப்படிச் செய் தால் என்ன நேரிடக் கூடும்.

அசுணப்பறவைகளின் வேட்டையைப்பற்றிய கதை திடீரென்று நினைவுக்கு வருகிறது. அந்த வேட்டைக்குக் கொலைக்கருவிகளே தேவையில்லையாம். தேனினும் இனிமை யான இசையை யாழில் மீட்டி எழுப்பினால் அந்தப்பறவை கூட்டங்கூட்டமாக வந்து இரசித்துக் கொண்டிருக்குமாம். அந்த நேரத்தில் திடீரென்று பறை கொட்டிப் பேரோசை எழுப்பினால் அந்தப் பறவைகள் அப்படியே இறந்துவிழுந்து விடுமாம். இரசிகரை எண்ணிப் பார்த்ததும் அப்படியஞ்சு கிறது கம்பனது கவியுள்ளம்.

"முத்தமிழ்த் துறையின்முறை நோக்கிய
உத்தம கவிஞர்க்கு ஒன்று உணர்த்துவென் ; —
'பித்தர் சொன்னவும், பேதையர் சொன்னவும்,
பத்தர் சொன்னவும், பன்னப்பெறுபவோ"

தமிழ் - இயல், இசை, நாடகம், என்னும் முத்தமிழாக வளரலாயிற்று அல்லவா? அத்தகைய தமிழ் வளர்த்த கவிஞர்களுக்கு நான் ஒன்று சொல்வேன். பைத்தியக்காரன் சொன்னதும், காதலிக்கும் பெண்கள் சொன்னதும், பக்தர் சொன்னதும் ஆராய்ச்சிக்குரியவையாகுமா என்ன? அது தான் என் கவிதை நிலையும்.

"அறையும் ஆடரங்கும் படப்பிள்ளைகள்
தரையில் கீறிடின், தச்சரும் காய்வரோ?
இறையும் ஞானம் இலாத என்புன் கவி,
முறையின் நூல் உணர்ந்தாரும் முனிவரோ?"

சிறுபிள்ளைகள் கோடுகள் கிழித்து; இது மாளிகை, இது ஆடரங்கு என்றெல்லாம் சொல்வதைத் தச்சர்கள் (பொறியியல் வல்லுனர்கள்) சகிக்காமல் கோபிப்பார்களா? அது போல கொஞ்சமும் அறிவுத்தெளிவு இல்லாத என் புன்கவி (இழிவான கவிதை) யைக் கேட்டு, நூல் விதிமுறைகளை முறையாக உணர்ந்தவர்கள் என்னைக் கோபிப்பார்களா?

"இந்த நூலை இயற்றிய அடியேன்தான் கம்பன்" — என்று தன் பெயரைக் கூட இங்கே குறிக்கவில்லை. ஷேக்ஸ்பியரின் நாடகங்களை எழுதியவன் ஷேக்ஸ்பியர்தானா என்று கூட ஒரு கேள்வி எழுந்தது. கம்பன் விஷயத்திலோ கம்பன் தானா கம்பராமாயணம் செய்தது என்ற கேள்விதான் அதிசயமாக எழக்கூடும். கம்பன் இராமன் கதை என்று தான். முதலில் பெயர் சூட்ட விரும்பினான். பிறகு நளன் கதை போன்ற சாதாரணக் கதை களாகி விடக்கூடாது என்று இராமாவதாரம் என்றே பெயர் சூட்டினான்.

இன்று :

இன்றையக் கவிவாணர்களில் கம்பனுடைய நிகரில்லாப் பெரும்பணியை உய்த்துணர்ந்திருப்பவர்கள் மிகச் சிலரே. இந்த நிலையை உணர்வாராயின் அவர்கள் தக்கவாறு பாராட்டுக்கும் சன்மானத்துக்கும் உரிய ஆவர் என்பது திண்ணம்.

*'கவிகளாயினோர் சான்றுவர் மெய்ப்பொருள்'* என்றான் கம்பன்

*மெய்ப்பொருள்ப் பணிவு என்றைக்கும்*
மேலும் ஒரு செல்வமாகும்.

# 17 வாய்மையும் மரபும்

வாய்மை காப்பதோடு மரபையும் காப்பது இராஜ தர்மம் ஆகும். வாய்மைக்கும் மரபுக்கும் முரண்படாமல் நடந்து கொள்வது அரசியல் தர்மந்தான்.

இந்த உண்மை தசரதசக்கரவர்த்தி வாயிலாக வெளிப்படுகிறது.

உண்மை என்றால் உள்ளத்தின் தன்மை. அது வாய்ப் பேச்சில் வெளிப்படும்போது வாய்மையாகிறது. செயற் படுகிற போது மெய்ம்மையாகிறது. இதை நாம் மனத்தில் பதிய வைத்துக் கொண்டால், தசரதன் எவ்வளவு கஷ்ட நஷ்டங்களுக்கும் அஞ்சாமல், மூத்த பிள்ளையான இராமனிடம், தான் கொண்டுள்ள நிகரற்ற அன்பையும் வாய்மை காக்கத் துறக்கத்துணிந்தான் என்ற. அருமைப் பாடு இனிது புலனாகும்.

அன்று:

வாலி பல இடங்களில் சஞ்சரிப்பவன் ஆதவால் இராமனைப் பற்றி வெகுவாய்க் கேள்விப்பட்டிருக்கிறான், அப்படியே இராமனை இலட்சிய புருஷனாகக் கௌரவித்து அவன் எப்போதும் தன் உயர்ந்த நிலையை நழுவ விட மாட்டான் என்ற நம்பிக்கையும் கொண்டிருந்தான்.

அத்தகை இராமன், சுக்கிரீவனுக்காக, மதுபான பழக்கம் முதலிய குறைபாடுகளையுடைய தன் தம்பிக்காக -- சத்தியத்தையும், தர்மத்தையும் தவறவிட்டானே இராமன் என்று அவனை இகழ்ந்து பேசுகின்றான்,

"வாய்மையும், மரபும், காத்து, மன் உயிர் துறந்த வள்ளல்
தூயவன் மைந்தனே! நீ, பரதன் முன் தோன்றினயே!'

"வாய்மையையும், மரபையும் காத்து அதற்காகத் தன் உயிரையே துறந்தவன் தசரதன். அந்த பரிசுத்த மானவனுடைய மைந்தனே! நீ பரதனுக்கு முன் பிறந்தாயே!'' என்று பரிகாசம் செய்கிருன் வாலி.

இந்த இடத்தில், தசரதன் வாய்மையையும் மரபையும் காக்கத் தன் உயிரையே கொடுத்தான் என்பது வெளிப் படையாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

தசரதன் மனைவியருள் கைகேயி போர்க்களத்திலும் கணவனுக்கு உரிய உதவிகளைச் செய்து வந்தாள். அதற்காக தசரதன் நன்றியுடையவனுயிருந்தான். இரண்டு வரங்கள் அவளுக்குக் கொடுப்பதாக வாக்களித்தாள். அவள்' எப்பொழுது கேட்டாலும் அந்த வரங்களைக் கொடுப் பதற்குத் தான் சித்தமாயிருப்பதாகச் சொன்னன்.

இராமனுக்கு "நாளை முடிசூட்டுவிழா" என்று கேள்விப் பட்டதும் கைகேயி, கூனியின் சூழ்ச்சியால் தசரதனிடம் தனக்கு முன்பு கொடுப்பதாகச் சொன்ன இருவரங்களை அளிக்குமாறு வேண்டினுள்.

'பரதன் முடிசூட்டிக்கொண்டு நாடாளவேண்டும். இராமன் பதினன்கு ஆண்டுகள் காடாள வேண்டும்' என்பது அவள் கேட்ட இரு வரங்கள். இங்கு வாய்மை தவருமல் கைகேயி கேட்டதைத் தரவேண்டும். சூரியகுல மரபும் வாய்மை காத்தலே. எனவே, இராமனுக்கு முடி சூட்டுவதில் அவள் குறுக்கிட்டதைச் சகிக்காமல் தான் கேட்ட வரங்களைக் கைவிடும்படி மன்ருடி வேண்டிக் கொண்டான் தசரதன். ஆனல் கைகேயியோ உயிரைக்

காப்பாற்றுவதைக் காட்டிலும் கொடுத்த வாக்கைக் காப்பாற்றுவதே கடமை' என வாதாடினள். இதில் கைகேயின் நிறையும், சக்கரவர்த்தியின் குறையும் ஒருவாறு வெளிப்படுவது போலத்தான் அறிஞர்களுக்குப் புலப்படும்.

கம்ப இராமாயணத்தில் தக்க பயிற்சி வாய்ந்த சோமசுந்தரபாரதி என்ற அறிஞர் "தயரதன் குறையும், கைகேயியின் நிறையும்" என்ற தலைப்பில் ஒரு நூலை எழுதி வெளியிட்டுள்ளார்.

*"அரிந்தான் முன் ஓர் மன்னவன் அன்றே அருமேனி*
*வரிந்து ஆர் வில்லாய்! வாய்மை வளர்ப்பான் வரம் நல்கி,*
*பரிந்தால், என் ஆம்?"*

என்றனள்.

சிபி சக்கரவர்த்தியின் கதையை நினைவூட்டுகிருள் கைகேயி. அவன் தன் வாக்கைக் காப்பாற்றுவதற்காகத் தன் உடம்பின் தசையையே அரிந்து கொடுக்கவில்லையா என்கிருள். இவ்வாறு தியாகம் செய்து காத்த வாய்மையை நீங்கள்பேணிக்காப்பதற்குப் பதில் அதற்கு முரணாக நடந்து கொள்வது முறையா? என்கிருள். இந்த வாதத்தைக் கேட்டதும் சக்ரவர்த்தியின் இதயம் அலறுகிறது. இரண்டு வரம் கேட்டாய் நீ. நானே உனக்கு மூன்று வரம் தருகிறேன் என்று:

*" ஈந்தேன்! ஈந்தேன்! இவ்வரம்; என்சேய் வனம் ஆள*
*மாய்ந்தே நான் போய் வான்உலகு ஆள்வேன்;*
*வசை வெள்ளம்*
*நீந்தாய், நீந்தாய் நின் மகனொடும்நெடிது!" என்றான்*

கொடுத்தேன் நீ கேட்ட வரங்களை. என் மகன் இராமன் காடாள்வான். பரதன் நாடாள்வான்; நான்

இறந்து வானுலகு ஆள்வேன். நீ உன் மகனோடு வசை மொழி என்னும் வெள்ளத்தில் நீந்தி நீண்ட காலம் வாழ்வாய் என்று மூர்ச்சிக்கிறான்.

இன்று :

கொடுத்த வாக்கைக் காப்பது என்பதைக் குறிக்கோளாகக் கொண்டிருக்கவேண்டும். வாய்மைக் காத்தலை விடச்சிறந்த அறம் வேறில்லை. வாய்மையே வெல்லும் (சத்யமேவ ஜயதே!) என்பதுதான் நம் அரசுச் சின்னத்தில் உள்ள குறிக்கோள். என்றும் மதிக்கப்படுவது வாய்மையே!

# 18 அரசியலில், கடமையுணர்வு

அன்று:

மன்னனின் கடமைஎன்ன? மந்திரியின் கடமை என்ன? அவர்கள் எவ்வாறு செயல்பட வேண்டும்! என்பதைக் கம்பன் அயோத்திநாட்டு அரசியலில் காட்டியுள்ளான். கம்பன் காட்டிய இக்கொள்கை என்றைக்கும் பொருந்துவதாகும்.

மன்னனின் மாண்பு:

மன்னனுக்கும் நல்லொழுக்கம் இன்றியமையாதது. அப்படியானால்தான் காமத்தைத் தூண்டும் மாதர்கள் மயக்கத்திலிருந்து விடுபட்டு மக்களுக்காக ஆற்றவேண்டிய கடமைகளை ஒழுங்காகச் செய்யமுடியும்.

மன்னவன் எப்படியிருக்க வேண்டும் என்பதை இராமனுக்கு வசிட்டமுனிவர் எடுத்துரைக்கிறார்.

வல்லரசுகளுக்கு மட்டுமா? ஏன் மும்மூர்த்திகளும் கூட ஒழுக்கம் இல்லாவிட்டால் அவர்கள் தொழில் ஒழுங்காய்ச் செய்யமுடியாது. ஆதாவது ஆக்கல், அளித்தல், அழித்தல் என்ற முத்தொழில்களையும்.

மும்மூர்த்திகளுக்கும் கூட ஒழுங்காகத் தொழில் செய்ய ஒழுக்கம் இன்றியமையாதது என்றால் வல்லரசுக்கு அது முக்கியம் என்பதைச் சொல்லவா வேண்டும்.

கோளும் ஐம்பொறியும் குறைய, பொருள்
நாளும் கண்டு, நடுவுறு நோன்மையின்
ஆளும் அவ்அரசே அரசு; அன்னது
வாளின் மேல் வரு மாதவம், மைந்தனே!

அபகரித்துக்கொள்ளும் இயல்புடையன ஐம்பொறிகள். அதை இயன்றவரையில் குறைத்து அடக்கிக் கொள்ளல் வேண்டும். எந்நாளும் பொருளாதார நிலையை மேம்படுத்து வதில் கண்ணும் கருத்துமாயிருக்கவேண்டும். பழிபாவச் செயல்களால் பொருள் சேர்க்கக் கூடாது, என்பதை விரத மாகக் கொள்ளவேண்டும். இப்படி ஒருஅரசன் வாழ்ந்தால் அதுவே அவனுக்கு மாதவமாகும். அமைச்சர் சொல்படி நடந்துகொள்வதே அரசனுக்கு உண்மையான ஆற்றலைத் தருவதாகும். தன்னிச்சையாக அவன் நடப்பது இழுக்குத் தரும் மக்களிடத்தில் அன்பாகவே நடந்து கொள்ள வேண்டும்.

"அன்பின் அல்லது ஓர் ஆக்கம் உண்டாகுமோ?

அதுவே அரசனுக்கு ஒரு சிறந்த செல்வமாகும்.

"வையம் மன்உயிர் ஆக,அம் மன்உயிர்
உய்யத் தாங்கும் உடல் அன்ன மன்னனுக்கு
ஐயம் இன்றி, அறம் கடவாது. அருள்
மெய்யில் நின்றபின், வேள்வியும் வேண்டுமோ?"

நாட்டு மக்களை உயிராகவும், அரசாங்கத்தை உடலாகவும் கொள்வதே மன்னன் கடமை. அறம் தவறாது; அருளிலும், மெய்யிலும் நிலைபெற்று இருப்பானாயின் அவனுக்கு வேள்விகள் செய்து பலன் அடைய வேண்டிய தில்லை.

"இனிய சொல்லினன்; ஈகையன்; எண்ணினன்;
வினையன்; தூயன்; விழுமியன்; வென்றியன்;
நினையும் நீதிநெறி கடவான்" எனில்,
அனைய மன்னற்கு அழிவும் உண்டாம்கொலோ?"

ஏழைகளிடத்தும் இனிமையாகப் பேசவேண்டும். பாத்திரமறிந்து ஈதல்வேண்டும். ஒரு காரியதிதைச் செய் வதற்கு முன் பலமுறை சிந்தித்துச் செயலாற்றவேண்டும். நிறைவேற்ற முடியாத (தற்கால தேர்தல் கால வாக்குறுதி கள் போல) வாக்குறுதிகளை அளிக்காது செய்து முடிக்கக் கூடிய நிறைவேற்றக் கூடிய காரியங்களுக்கு மட்டும் வாக்களிக்க வேண்டும். பெருந்தன்மை வேண்டும். இதுவே வெற்றி. நினைப்பிலும் நீதி நெறி தவறுமல் இருக்க வேண்டும். இத்தகைய குணங்கள் நிறைந்த மன்னனுக்கு அழிவு எனபது இல்லை.

ஒழுக்கம் இல்லாத செயல்களைத் தவிர்க்கவேண்டும் பொன் நிறை பார்க்கும் தராசு போல அத்தகைய ஒப் பற்ற நிலையுடைய அரசர்கள் நல்லவர்கள் நோக்கிய காலத்தையே கண்ணுகக் கொண்டு அவர்கள் பார்வை யையே தங்களுக்கும் பார்வையாகக் கொள்வார்கள்.

"ஓர்வின் நல்வினை ஊற்றத்தினர் உரை,
பேர்வுஇல் தொல்விதி பெற்றுஉளது" என்றுஅரோ,
தீர்வுஇல் அன்புசெலுத்தலின், செவ்வியோர்
ஆர்வம் மன்னவற்கு ஆயுதம் ஆவதே"

நல்லவைகளை முன்கூட்டி உணர்ந்து சொல்லக் கூடி யவர்கள் அமைச்சர்கள் என்று மாற்ற முடியாத பழமை யான விதிகளில் சொல்லப்பட்டுள்ளது. எனவே அத்தகைய அமைச்சர்கள் மீது மெய்யன்பைச் செலுத்த வேண்டும், அரசர்கள். செம்மையான அவர்கள் (அமைச்சர்கள்) ஆர்வமே மன்னனுக்குச் சிறந்த ஆயுதமாகும்.

"தூமகேது புகழுக்கு எனத்தோன்றிய
வாமமேகலை மங்கை யரால்வரும்
காமம் இல்லைஎனின், கடுங்கேடுஎனும்
நாமம் இல்லை; நரகமும் இல்லையே"

அரசர்களின் புகழுக்கு வால் நட்சத்திரம் போலத் தோன்றுவது மகிகையர் மூலமாக வரும் சிற்றின்பம்.

அதை அடக்கி ஆள முடியுமானல் கொடிய துன்பம் என்ற பெயரே கிடையாது, அவர்களுக்கு நரகமும் இல்லை என்பது நம்பிக்கை. பெரிய பெரிய அரசுகள் மங்கையர் மயக்கதி தால் நாசமான வரலாறு உண்டே!

மன்னன் எப்படியிருக்க வேண்டும் என்பதை வசிட்டன் வாயிலாகக் கூறிய கம்பன் அமைச்சரின் மாண்பினைக் கவிக் கூற்ருகக் கூறியுள்ளான்.

அமைச்சர் மாண்பு:

"குலம் முதல் தொன்மையும், கலையின் குப்பையும்
பலமுதல் கேள்வியும, பயனும், எய்தினர்;
நலம்முதல் நலியினும் நடுவு நோக்குவார்;
சலம் முதல் அறுத்து, அருந்தருமம் தாங்கினர்"

அமைச்சர்கள் நல்ல பழைய கௌளவரமான குடும்பத்தைச் சேர்ந்தவர்களாயிருக்க வேண்டும். சாஸ்திர ஞானம் மிகுதியாகப் பெற்றிருக்க வேண்டும். முதல் தரமான கல்வி, கேள்விகள் உடையவர்களாயிருக்க வேண்டும். அந்த (கல்வி, கேள்விகளின்) ஆராய்ச்சியின் பயனை அறிந்திருக்க வேண்டும். சுயநலம் வேரொடு கெடுவதானலும் நடுவு நிலைமையினின்று பிறழக்கூடாது. கோபத்தை அறவே விட்டொழித்து மேலான தருமத்தை நிலைநிறுத்துபவர்களாயிருக்க வேண்டும்.

"நல்லவும் தீயவும் நாடி, நாயகற்கு,
எல்லை இல் மருத்துவன் இயல்பின் எண்ணுவார்;
ஒல்லைவந்து உறுவன உற்ற பெற்றியின்,
தொல்லை நல்வினை என உதவுல சூழ்ச்சியார்"

பகுத்தறிவினை உபயோகித்து அரசனுக்கு இன்னது நல்லது இன்னது தீயது என்பதை நன்குணர்ந்து பேரறிவுடைய வைத்திய நிபுணன் போல் புத்தி சொல்லக் கூடியவர்கள் அமைச்சர்கள். விரைவில் இடையூறுகள் அடுக்கடுக்காய் வந்தாலும் பழைய நல்வினைகள் ஒருவனுக்கு

உதவுவது போல், அரசனுக்கு அமைச்சர்கள் தங்கள் மதி நுட்பத்தால் உதவவேண்டும்.

அறுபதினுயிரம் பேர் அமைச்சராக உதவினூர்கள் என்ற கவிக் கூற்றிலிருந்து கம்பன் ஒரு பெரிய பாராளு மன்றத்தையே தீர்க்க தரிசனமாகக் குறிப்பிடுவது போல காண்கிறது.

''அறுபதினுயிரர் எனினும், ஆண்தகைக்கு
உறுதியில் ஒன்றுஇவர்க்கு உணர்வுஎன்று உன்னலரம்;
பெறல்அருஞ் சூழ்ச்சியர்; திருவின் பெட்டினர்:

தொகை அறுபதினுயிரமாய் இருந்தாலும் அரசாங்க நலத்தில் ஒருமைப்பாடு வேண்டும். அமைச்சர்களுக்கு தருமத்திற்கு விரோத மில்லாதவாறு மதிநலத்தைப் பிரயோகிக்க வேண்டும்.

மேலே சொன்னவற்றேடு இயல்பாகவே பெருஞ் செல்வர்களாகவும் இருக்கவேண்டும் இவையனைத்தும் அமைச்சருக்குரிய அருங்குணங்கள் எனக் கம்பன் கூறுகிறுன். செல்வராக இருந்துவிட்டால் திடீர்ச் செல்வனுகும் பேராசை தோன்ருது என்பது கம்பன் எண்ணம்!

இன்று:

என்றும்மாருத உண்மைகளை ஆங்கிலத்தில் "Universal Truth" என்பர். அது போலக் கம்பன் காட்டும் உண்மை . ம கள் என்றும் மாற்றிக் கொள்ளக் கூடியதல்ல. அ வை எக்காலத்தும், மாருத உண்மைகள் என்ருல் அது சி திும் மிகையாகாது.

கம்பன் சிறந்த அரசியல் வாதிக்களுக்கு காட்டாகச் சிலரது வாழ்க்கையை தனது ச எடுத்துக் காட்டியுள்ளான். ாவியத்தில்

அரசியல் வாதிகள் தனக்கு அரச பத போதிலும் அதற்காகத் தருமத்திற்கு வியே கிடைத்த விரோதமாகச்

செல்லக்கூடாது. மன்னன், அமைச்சர் இவர்களைப் போலத் தூதனுக்கும் கடமையுணர்வு இன்றியமையாதது.

அன்று:

உதாரணமாக அங்கதனை எடுத்துக் கொள்வோம்.

இராமன் போருக்கு முன் தூது அனுப்பிச் சமரசம் பேச அங்கதனை இராவணனிடம் தூதனாக அனுப்புகிறான், அவனை யார் என்று அறிந்து கொண்டதும் இராவணன் அவன் மீது மிகுந்த பாசத்தைப் பொழிகிறான்.

''தாதையைக் கொன்றான் பின்னே தலைசுமந்து, இருகை நாற்றி,
பேதையன் என்ன வாழ்ந்தாய்'' என்பது ஓர் பிழையும் தீர்ந்தாய்;
சீதையைப் பெற்றேன்; உன்னை சிறுவனுமாகப் பெற்றேன்;
ஏது எனக்கு அரியது?' என்றான் —இறுதியின் எல்லை கண்டான்''

தந்தையைக் கொன்றவன் பின்னே தலை குனிந்து இருகைகளைத் தொங்கவிட்டுக் கொண்டு முட்டாள் என்று பெயரெடுக்கும்படி வாழ்ந்தாய். இந்த பழி உனக்கு இனித்தீர்ந்து விட்டது. சீதை கிடைத்ததோடு எனக்கு ஒரு மகனும் கிடைத்துவிட்டான். இதைவிட எனக்கு வேறு என்ன பாக்கியம் வேண்டும் என்று அங்கதனைக் குளிர் விக்கிறான், மரண வாசலில் நிற்கும் இராவணன்,

அது மட்டுமா! சுக்கிரீவன் வசம் இருக்கும் உன்னுடைய கிட்கிந்தை அரசை மீட்டு உனக்குத் தருவேன் என்கிறான்.

''அந்நரர் இன்று, நாளை, அழிவதற்கு ஐயம் இல்லை;
உன் அரசு உனக்குத் தந்தேன்; ஆளுதி, ஊழிகாலம்;
பொன் அரி சுமந்த பீடத்து, இமையவர் போற்றிசெய்ய
மன்னவன் ஆக யானே சூட்டுவென், மகுமடம்'' என்றான்

அந்த மனிதர்கள் இன்று அல்லது நாளை அழிந்து போவார்கள். இதில் சிறிதும் ஐயம் இல்லை. நான் உன்னுடைய தந்தையின் அரசைமீட்டு உனக்குத் தருவேன். அதை ஊழிக்காலம் ஆண்டு வருவாய். தேவர்கள் போற்றித் துதிக்க, பொன்னால் ஆன சிங்கம் அமைந்த பீடத்தில் மன்னனாக இருத்தி, உனக்கு நானே முடிசூட்டுவேன் என்கிறான் இராவணன்.

அதற்கு அங்கதன் சொல்வதைப் பாருங்கள்.

"வாய்தரத்தக்க சொல்லி, என்னை உன் வசஞ் செய்வாயேல்,
ஆயதரத்தக்கது அன்றோ, தூது வந்த அரசது ஆள்கை
நீ தரக் கொள்வேன் யானே? இதற்கு இனிநிகர் வேறு
எண்ணின்,
நாய்தரக் கொள்ளும் சீயம், நல் அரசு!' என்று நக்கான்."

வாயில் வந்த வார்த்தைகளைக் கொட்டி நீ என்னை உன் பக்கம் சேர்க்கப்பார்க்கிறாய் தூது வந்தவர்களை இவ்வாறு மயக்கித் தன் பக்கம் சேர்ப்பது தான் ஓர் அரசனது ஆட்சித் திறமையோ! நீ எனக்குத் தருவதாக சொல்கிறாயே அரசுரிமை இது எதைப்போல் இருக்கிறது தெரியுமா? நாய் கொடுக்கச் சிங்கம் பெற்றுக்கொள்ளும் அரசைப் போல் இருக்கிறது. அது நல்லரசாகத்தானே இருக்கும்! என்று ஏளனச் சிரிப்பு சிரிக்கிறான். இது ஆசைவார்த்தைக்கு ஆட்படாத உத்தமத் தொண்டனின் இலக்கணமாம்.

அதுபோல, அனுமனும் தன்னலம் கருதாமல் பிறர் நலத்தைப் பேண வேண்டும் என்பதையே தன் குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்தவன். இராமாயணத்தில் எந்த இடத்திலாவது அனுமன் கைம்மாறு கருதித் தனக்குயென்று ஒருகாரியத்தை செய்தான் என்று காட்ட முடியுமா? அப்படிப்பட்ட தொண்டர்களே அரசியலில் தேவை!

இன்று:

இன்றைய சிலஅரசியல்வாதிகள் ஒரே கட்சியிலிராமல் தங்கள் சுயநலம் கருதி பச்சோந்தி போல ஒவ்வொருநாளும் ஒவ்வொரு கட்சிக்குத்தாவுகிறார்கள், இவர்கள் இறுதியாகப் படும்பாட்டை இன்றுநாம் தெளிவாகக் காண்கிறோம்.

இன்றைய அரசியல்வாதிகள் தங்கள் கட்சிதருமத்திற்கு விரோதமாகச் சென்றால் அன்றி வேறு கட்சிக்கு மாறக் கூடாது. பணவெறி, பதவிவெறி, ஆதிக்க வெறி, அதிகார வெறி, சுயநலம் இவை கருதி கட்சிமாறக் கூடாது

இவை கருதியிருந்தால் அங்கதன், இராவணன் பக்கம் சேர்ந்திருக்கலாம். ஆனால் தருமம் ஒன்றையே குறிக் கோளாகக்கொண்டதினால் அங்கதன் தன் மனத்தால் கூட அவற்றை நினைத்தானில்லை. இதைவிடவா வேறு எடுத்துக் காட்டு வேண்டும் இன்றைய அரசியல் வாதிகளுக்கு! கம்பன் அறமுறை அரசியலுக்கு வழிகாட்டிச் சென்றுள்ளான்! உலகம் அதனைப் பின் பற்றுமாக!

# 19 மரணம் வரைதான் பகைமை

பகைவன் போர்க்களத்தில் வீழ்ந்து விட்டால் அன்ருேடு பகைமையை மறந்துவிட வேண்டும் என்பது யுத்த தர்மங்களில் ஒன்று. இதைக் கம்பன் தன் காவிய நாயகன் வாயிலாக வெளிப்படுத்துகிருன்; யுத்த காண்டத்தில் இராவணன் வதைப் படலத்திலே காணும் காட்சி இது

அன்று :

இராவணன் இறந்து கிடக்கையில் இராமன் விபீஷணனை அழைத்து இராவணனுக்கு இறுதிச் சடங்குகள் செய்யும்படி பணிக்கிருன். இதன் மூலம் இக்கொள்கை நன்கு [எடுத்துக் காட்டப்பட்டுள்ளது இந்த இடத்திலே.

இராவணன் போர்க்களத்திலே வீழ்ந்து கிடக்கின்ருன். இராமன் இராவணனின் உடம்பைப் பார்க்கின்ருன். அவன் மீதுள்ள முதுகுப்புண்ணைக் கண்டதும் விபீஷணனை நோக்கிச் சொல்கிருன்.

"போர்ப் புறங்கொடுத்தோர்ப் போன்ற
ஆண் தொழிலோரின் பெற்ற வெற்றியும் அவத்தம்"

போரில் புறப்புண்பட்ட ஆண்மகனிடம் பெற்ற வெற்றி ஒரு வெற்றியாகுமா?"

இதைக் கேட்ட விபீஷணன் இராமனை நோக்கி, அன்று ஆயிரந் தோள்களையுடைய கார்த்த வீரியனும், வாலியும் இராவணனிடம் பெற்ற வெற்றி தேவர்கள் கொடுத்த சாபத்தினுல் பெற்றவை. ஆனல் உன்னுடைய வெற்றிக்கு உண்மையான காரணம் எவையென்ருல் தாயைப் போல தொழ வேண்டியவள் மீது இராவணன் கொண்ட காதல் நோயும், நீ கொண்ட தர்மாவேசமாகிய கோபமும் தாம்

இவன் இந்த உலகத்திலுள்ள நாடுகள் அனைத்தும் ஓடி அலைந்தான், தனக்கு எதிரிகள் யாராவது இருக்கிறார்களா என்று. அப்போது எல்லையிலுள்ள திசை யானைகளோடு போரிட்டான். அந்த யானையின் கொம்புகளால் ஏற்பட்டதுதான் இந்தப் புறப்புண். அப்படியிருக்கப் பகைவர் படைகள் இவனை என்ன செய்ய முடியும்?

அந்தத்திசை யானைகளின் கொம்புகளை முறித்து அவைகளைத் தன்மார்பில் அணிந்திருந்தான். விஷம் சிவபெருமானை விழுங்கலாம் அல்லது கழுகினைச் சென்று நாகப்பாம்பு அடைக்கலம் அடையலாம் இவை நடந்தாலும் நடக்கலாம். ஆனால் இராவணனிடம் இந்த உலகத்திலும், அதற்கப்பாலும் உள்ள எதிரிகளின் படைகள் வெற்றிபெறுவது என்பது மட்டும் நடக்காது.

இவையனைத்தும் விட உன் வெற்றிக்கும் வேறு ஒரு காரணமும் உண்டு.

"பன்றியாய் எயிற்றுக் கொண்ட பரம்பரன் முதல் பல்லோர்
"என்று யாம் இடுக்கண்தீர்வது?" என்கின்றார்; "இவன் இன்று உன்னால்
பொற்றினான்" என்றபோதும் புலப்படார்,"பொய்கொல்" என்பார்

முன்பு வராக அவதாரம் செய்து இந்த உலகத்தை காத்த திருமால் முதலானோர், 'என்று இவன் செய்யும் துன்பத்திலிருந்து 'மீள்வது' என்று வருந்தினர். அதனால் தான் இன்று இவன் உன்னால் அழிந்தான். ஆனால் இப்போதும் அவர்கள் (தேவர்கள்முதலானோர்) இராவணன் அழிந்து விட்டான் என்பதை நம்பமாட்டார்கள் என்றதும், இராமன் தன்னுடைய சந்தேகமும், வெட்கமும் நீங்கி விபீஷணனைத் தசமுகனுக்கு ஈமக்கடன் செய்யச் சொல்கிறான். வீடணன் மறுக்கிறான்.

"வீடணா! தக்கது அன்றால்;
என்னதோ, இறந்துளான்மேல் உயிர்த்தல்? நீஇவனுக்கு
ஈண்டு சொன்னது ஓர் விதியினாலே கடன் செயத்துணிதி"

இன்னும் நீ இவன் மீது பகைமை பாராட்டுவது என்பது தகுதியான செயல் அன்று. இவ்விடத்தில் நீ பழைய முறைப்படி உன் தமையனான இவனுடைய இறுதிச் சடங்குகளைச் செய்ய முனைவது தான் தக்கது.

"போழ்ந்தென அரக்கன் செய்த புன்தொழில் பொறையிற்று
ஆமால்;
வாழ்ந்த நீ இவனுக்கு ஏற்றவழில் கடன்வகுத்தி' என்ன
தாழ்ந்தது ஓர் கருணை தன்னால், தலைமகன் அருள,"

பிளக்கக்கூடிய அளவுக்கு இந்த அரக்கன் செய்த கொடுஞ்செயல்களைப் பொறுத்தலே பொறுமையாகும். உயிருடனிருக்கும் நீ இவனுக்குரிய இறுதிக் கடன்களைச் செய்யவேண்டும் என்று இராவணன் மேலுள்ள கருணையினால் இவ்வாறு விபீஷணனிடம் இரக்கத்தோடு சொல்கிறான் இராமன்.

இந்தச் செயல் பகைவனாயினும் இறந்துவிட்டால் அவன் மீதுள்ள பகைமையை மறந்து விடவேண்டும் என்ற தனிப் பெருங்கருத்துக்கு ஒரு நிகரற்ற எடுத்துக்காட்டு. இறக்குமுன் பல்வேறு மாறுபாடுகள், பகைமை உணர்ச்சிகள் கொண்டவரும். இறந்தவனை வெறுக்காது அவனது 'நற்குண நற்செயல்களைப்' புகழ்வதைக் காண்கிறோம். சுடுகாடுதான் சமரசத்திற்கு ஒப்பற்ற இடம். சர்வகட்சி ஒருமைப்பாட்டுக்கு ஏற்ற இடம்.

இன்று:

"பகைவன் இறந்துவிட்டால் அன்றே அவன் மீதுள்ள பகையை மறந்து விடவேண்டும்" என்று அன்று கம்பன் காட்டிய இக்கொள்கை முக்காலத்துக்கும் பொருத்தமானது தான் என்பதைச் சொல்லவா வேண்டும்!

# 20 ஸ்ரீராம நாமத்தின் மகிமை

பக்தியின் உயர்வையும், ஸ்ரீ இராமநாமத்தின் மகிமை யையும், அறத் தொண்டின் பெருமையையும் ஸ்ரீ ஆஞ்சநேயர் வாயிலாகத் தன் காவியம் முழுவதும் காட்டியுள்ளான் கம்பன்.

முதன் முதல் 'அநுமன் யார்?' என்று அறிமுகம் செய்து கொள்வோம்.

''மாணியாம் வேடந்தாங்கி மலரயற்கு அறிவு மாண்டு ஓர்
ஆணியாய் உலகுக்கெல்லாம் அறம் பொருள் நிரப்பும்
அண்ணல்''

இது அநுமனைக் குறித்துக் கம்பனது அறிமுகம். மாணி என்றால் பிரம்மச்சாரி. பிரம்மசரீய ஒழுக்கமே உருவெடுத் தாற்போல விளங்குகிறான் அநுமன். அதனால்தான் அரக்கர் பேரூரில், இரவிலே சீதையை தேடும்போது (ஊர்தேடும் படலத்தில்) ஆண்களையும், பெண்களையும் மனக்கலக்கம் சிறிதும் இன்றி அலங்கார நிலையிலும், அலங்கோல நிலை யிலும் சமமாகவே பார்க்கிறான்.

தன் மனத்தில் உள்ள கொள்கையை உறுதிப்படுத்து வதற்காக இராமநாமத்தை உச்சரிக்கிறான்.

'ஊறு, கடிது ஊறுவன, ஈறு இல் அறம் உன்னு,
தேறல் இல அரக்கர் புரிதீமை அவைதீர,
ஏறும் வகை எங்கு உளது? ''இராம!'' என எல்லாம்
மாறும்; அதின் மாறு பிறிது இல்' என மதித்தான்.

இராம நாமத்தை நம்பியே அனுமன் தன் உடல் வலிமையையும், உள்ளத்தின்வலிமையையும் உறுதிப்படுத்தி மேம்படச் செய்கிறான். இந்த நம்பிக்கைதான் ஆணி வேராக அமைந்துள்ளது. இத்தகைய இராம பக்தியால்

தான் துணிவுற்றுச் சீதா பிராட்டியைத் தானே இராமனிடம் சேர்த்து விடுவதாகச் சொல்லுகிறான்.

'உண்டுதுணை என்ன எளிதோ உலகின்? அம்மா!
புண்டரிகை போலும் இவள் இன்னல் புரிகின்றாள்;
அண்டமுதல் நாயகனது ஆவி அனையாளைக்
கொண்டு அகல்வதே கருமம்' என்று உணர்வு
கொண்டான்

சீதையை ஒரு கணம் நோக்குகிறான். பிராட்டியின் அழகைப் போல் துன்பமும் நிகரற்றதாக உள்ளதே! இவளது துன்பத்தை நீக்க வேண்டும் என்று அருள் உள்ளம் மேலிட அவளைத் தன் தோளில் ஏறுமாறும் வேண்டுகிறான். அவனுக்கு இந்த தைரியம் எப்படி வந்தது? கடல் கடக்கும் ஆற்றல் தனக்குள்ளது என்ற நம்பிக்கையால்தான். அந்த நம்பிக்கைக்கு அடிப்படை அவனது இராம பக்திதான். அந்த பக்தியுணர்வில்தான், சீதை 'நீ எப்படிக் கடல் கடந்தாய்?' என்று கேட்கும்போது பின்வருமாறு பதிலிருக் கிறான்.

''உன் துணைவன் தூயதாள்
ஒருங்குடை உணர்வினோர், ஒய்வில் மாயையின்
பெருங்கடல் கடந்தனர் பெயரும் பெற்றிபோல்
கருங்கடல் கடந்தனன், காலினால்'' (5.4.97)

என்றான். எந்தச் செயல் செய்யவும், இறைவன் மீது நம்பிக்கை தேவை. அந்தப் பக்தியே ஒருவனை வாழ்விக்கும்! பக்தியே சகல சக்தியும் என்று பாரதி சொன்னதும் உண்மையே!

இந்த இராமநாமத்தின் மகிமை மக்கள் உள்ளத்தில் என்றும் திகழுமே. கம்பனின் இராம பக்தியின் எழுச்சி தானே இராமாவதாரமாக மலர்ந்தது!